# கல்கி

KALKI 26.3.95 ரூ. 3.00

+ டாக்டர் கட்டுரை
கிட்னி தானமும்
பாதுகாப்பும்...

# குண்டும் அழகுதானே?

## சரவணா பில்டர்ஸ் [பி] லிட்.,

சரவணா பல ஆண்டுகளாக நல்ல பல திட்டங்களை வகுத்து பல தொழில்களில் முதலீடு செய்து அதிகபட்ச லாபத்தையும், உத்திர வாதத்தையும் உங்கள் முதலீட்டிற்கு அளித்து வந்துள்ளது.

**இப்பொழுது உங்கள் முதலீட்டிற்கு**




**வட்டியும்,**




**ஊக்கத்தொகையும்,**

பொன், வெள்ளி நாணயங்கள் பரிசாகவும் வழங்குகிறது.

**மாதம், காலாண்டு, அரையாண்டு, ஆண்டு வட்டி பின் தேதியிட்ட காசோலைகளாக முன்னதாகவே வழங்கப்படுகின்றது.**

# சரவணா

**கிரெடிட் அண்ட் இன்வெஸ்ட்மென்ட்ஸ்**

சிட்டி சென்டர் பிளாசா (முதல் மாடி) (எல்லீஸ் ரோடு முனையில்)
3, மவுண்ட் ரோடு, சென்னை-2. ✆ 848486, 845462, 833828

**சரவணனை நம்பியவர் வளருவர்**

**சரவணாவில் முதலீடு செய்தவர் மேம்பெறுவர்.**

சரவணா பெனிபிட் பண்ட் லிட்.,

சரவணா சிட் பண்ட்ஸ் [பி] லிட்.,

# பம்பாய்

**யா**ரும் தொட்டுப் பார்க்கக் கூட பயப் படக்கூடிய பாபர் மசூதி இடிப்பு - விளைவான பம்பாய் கலவர விவகாரத்தை அதில் பாதிக்கப் பட்ட ஒரு தனி மனிதனின் பார் வையில் அணு அணுவாக அலசி இருக்கிறார் மணிரத்னம்.

இந்த மாதிரி இரண்டு மதங்கள் சம் பந்தப்பட்ட மிக சென்ஸிட்டிவ் விவகாரத் தைக் கையாளுவதற்கு அடித்தளமாக ஒரு சின்ன காதலை உபயோகப்படுத்துகிறார். இந்து பையன்; முஸ்லிம் பெண். இரு வீட்டார் எதிர்ப்பு. பம்பாய்க்கு ஓடி வந்து ரிஜிஸ்தர் கல்யாணம். ஒரு பாடலில் இரண்டு குழந்தைகள்.

முன்னதாக, குழந்தை உண்டான விஷயம் தெரிந்து, "எப்படி சமாளிப்பது" என்று ஏழைப் பக்தி ரிகையானனான ஹீரோ கேட்க, "நமக்குத்தான் ரெண்டு சாமி இருக்கே. பார்த்துக்க மாட்டாங் களா?" என்று மனீஷா பதில் சொல்வதில் தனி மனிதர்களைப் பொறுத்தவரை அன்புக்கு முன் னால் மதம் பெரிய விஷயமில்லை என்பது ரிஜிஸ் தர் ஆகிறது.

அழிக்க முடியாத கறையாகி விட்ட அந்த டிசம்பர் - 6, ஒரு 'ஸ்டில்' மூலம் மட்டுமே காட் டப்படுகிறது. பின்னணியில் அன்றைய தின தலைப்புச் செய்திகள்.

முற்றிலும் வன்முறை சார்ந்த ஒரு நிகழ்ச் சியை, அதன் சாயல் கூட இல்லாமல் வெறும் முக பாவ வெளிப்பாடுகள், 'mood'க்கு ஏற்ற 'லைட் டிங்' மூலமே கொண்டு வந்திருப்பது சாதனை.

கலவரத்தில் குழந்தைகள் காணாமல் போக, திகிலோடும் துயரோடும் தொடங்கும் படத்தின் இரண்டாம் பாகம். ஒரு கட் டத்தில் டாக்குமெண்ட்ரி உணர்வைத் தந்தாலும் அந்தச் சம்பவத்தை எக் காரணம் கொண்டும் மிகைப்படுத்தி 'சீப்-செண்ட்டிமெண்ட்' ஆக்கிவிடக் கூடாது என்பதில் இயக்குநருக்கு இருக்கிற உறுதி புரிகிறது. காணாமல் போகிற குழந்தைகளை மார்ச்சுவரி யில் தேடப் போகிற சமயத்தில் அந்தப் பெற்றோரின் துக்கம் கலபமாக நம்மோடும் ஒட்டிக் கொள்கிறது.

இதெல்லாவற்றிலும் சிகரம், தன்னைக் காப் பாற்றி, உணவு அளிக்கும் அலியிடம் அந்தக் குழந்தை கேட்கிற கேள்விகள் : "ஹிந்துன்னா என்ன? முஸ்லிம்னா என்ன? நான் ஹிந்துவா, முஸ்லிமா?"

ஹிந்து அப்பாவுக்கும் முஸ்லிம் அம்மாவுக்கும் பிறக்கிற குழந்தை, கலவரக்காரர்களைப் பார்த்த தும் அவசரமாகத் தன் தாத்தாவின் நெற்றி விபூ தியை அழிக்கிற காட்சியில், நெஞ்சில் சம்மட்டி.

உக்கிரமான அந்த கிளைமேக்ஸில் வரும் மதம் தாண்டின மனிதநேயம் குறித்த இயல்பான வசனங்கள் யாரையும் உலுக்கி விடக் கூடியவை.

சராசரி சினிமாக்களிலிருந்து வெகுவாக விலகி, சமூக ஒழுக்கம் குறித்து ஆயிரம் கேள்விகள் முன் வைக்கும் இந்தப் படம், மணிரத்னம் மட்டுமல்ல; ஒவ்வோர் இந்தியனும் பெருமைப்பட்டுக் கொள்ள ஒரு வாய்ப் பைத் தந்திருக்கிறது.

— ஆர்.பி.ஆர்.

# குண்டும்



குண்டான ஒரு மனிதரின் வயிற்றுப் பகுதியில், இஞ்ச் டேப்பின் ஒரு முனையை வைத்துப் பிடித்துக் கொண்டிருக்கும் தையற்காரர் கேட்கிறார் : "இஞ்ச் டேப்பின் அடுத்த முனையை எடுத்துக் கொண்டு போன பையன் இன்னுமா வந்து சேரவில்லை?"

உடல் பருமனானவர்களைப் பற்றி இப்படிப்பட்ட ஜோக்குகள் நிறைய படித்திருக்கிறோம். குபீரென்று சிரித்துமிருக்கிறோம். ஆனால், தாங்கள் குண்டாக இருப்பது பற்றி சம்பந்தப்பட்டவர்கள் என்ன நினைக்கிறார்கள்?

"வெளியில கால் வெக்கவே வெக்கமா இருக்குங்க!" என்று பொருமும ஆரம்பிக்கிறார், இருபது வயதான ரமா. "ரோட்டுல போனாலே 'குண்டுக் கத்தரிக்கா'ன்னு பாட்டுப் பாடுவாங்க. இன்னும் சிலர், 'எந்தக் கடையில அரிசி வாங்கறீங்க?'ன்னு கமெண்ட் அடிப்பாங்க. என் தங்கைகளுடன் பீச், சினிமா என்று போகும் போது, 'இங்க பாருடா... யானை குட்டிங்களோட ஊர் வலம் போவுது'ன்னு கிண்டல்கள். அதனால வெளியில போகவே வெறுப்பா இருக்கு...!" என்கிறார் ரமா.

வெளியாட்கள் மட்டும்தானா கிண்டலடிக்கிறார்கள்? "வீட்டுலயே ஏகப்பட்ட கிண்டல்ங்க!" என்று ஆரம்பிக்கிறார் இருபத்தெட்டு வயது வித்யா.

" 'இவ முதல்ல சாப்பிட உட்கார்ந்துட்டாளா... போச்சு. பானை காலிதான்!' என்று கூடப் பிறந்தவர்கள் கமெண்ட் அடித்தால், இப்படிப் பருத்துக்கிட்டே போனா... எவன்டி உன்னக் கட்டிக்குவான்? குட்டி யானைக்குத் தகுந்த குண்டு யானையை நாங்க எங்கேன்னு போய்த் தேடுவோம்?" என்று பெற்றோரும் சேர்ந்து கிண்டலடிக்கும் போது வருத்தமாகத்தான் இருக்கிறது!" என்கிறார் வித்யா.

"குண்டாக இருப்பதென்பது கல்யாணத்துக்குத் தடையாக இருப்பது பெண்களுக்கு மட்டுந்தானா? ஆண்களுக்கும் சேர்த்துத்தான் பிரச்னை! இதுவரை ஐந்து பெண்கள் என்னைப் பார்த்ததும் மிரண்டு போய் 'ரிஜெக்ட்' பண்ணி விட்டார்கள்!" என நொந்து போய்ச் சொல்கிறார் இருபது வயதிலேயே எடையில் சதம் போட்டு விட்ட ராஜா.

"திருமணத்துக்கு முன்புதான் பிரச்னை என்பதல்ல; பருத்து வரும் என் உடலைப் பார்த்து என் எட்டு வயது மகனே வெட்கப்படுகிறான்!" என்கிறார் முப்பத்திரண்டு வயது மாலதி. "சிசேரியனுக்குப் பிறகு புஷ்டியாகச் சாப்பிட வேண்டுமென்று பலரும் வற்புறுத்தியதன் விளைவு கொஞ்சம்

ஆரோக்கிய கண்ணோட்டத்தினாலேயே இத்தகைய உற்சாகர்களின் தோற்றமும் ஒருவித ஜாலியான அழகுடன் நமக்குப் புலனாகிறது.



• பிந்துகோஷ் : பருமனுக்காகவே சான்ஸ்...

கொஞ்சமாக உடல் பருக்க ஆரம்பித்து, இப்போது 82 கிலோவைத் தாண்டி விட்டது. மாடிப்படி ஏற முடியாது; மூச்சு வாங்கும். வாசலில் காலிங் பெல் அடித்தால் 'டக்' கென்று ஓடிப் போய்ப் பார்க்கக் கூட முடியவில்லை!" என்று அலுத்துக் கொள்கிறார் மாலதி.

நல்ல சாப்பாடு உடல் பருமனை அதிகரிக்கச் செய்யும் என்பதற்கு பிந்துகோஷ்"ம் ஓர் உதாரணம். "நீங்களெல்லாம் ஒரு தட்டு சாதத்தில் சாம்பார், ரசம், மோர் என்று சாப்பிடுவீர்கள். எனக்கோ ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தட்டு சாதம் வேண்டும்!" என்று வெளிப்படையாகப் பேசுகிறார் பிந்துகோஷ்.

"நடனக் குழுவில் இருந்த போது உடல் பருத்து விட்டதால் சான்ஸ் போனது. மனமொடிந்து போனேன். பிறகு எனது 'பருமனுக்காகவே கோழி கூவுது படத்தில் சான்ஸ் கிடைத்தது. அப்புறமென்ன? உடல் பருமனே எனது வருமானத்திற்கும் வழிகாட்டியாக அமைந்து விட்டது!" என்கிறார் பிந்துகோஷ்.

"உங்களைப் பார்த்தாலே கேலியாகச் சிரிக்கிறார்களே! அதில் வருத்தமேதும் இல்லையா?"

"ஒரு வருத்தமும் இல்லை. என் மகள்கள் கூட, 'அம்மா, உன்னைப் பார்த்து யாராவது கிண்டல் செய்தால் நீ சட்டையே செய்யாதே!' என்றுதான் சொல்கிறார்கள். ஆயினும் பருமனாய் இருப்பதால் நடப்பது சிரமமாக இருக்கிறது. உட்கார்ந்து எழுந்திருப்பதும் சிரமமாக இருந்ததால் எனது 116 கிலோ எடையைச் சிகிச்சையின் மூலம் 80 கிலோவாகக் குறைத்துக் கொண்டு விட்டேன்!" என்கிறார் பிந்துகோஷ்.

"பருமனாக இருப்பவர்களுக்கு உடல் ரீதியான பிரச்னைகள் மட்டுமல்ல; மனத்தளவிலும் இவர்கள் காயப்பட்டுப் போவார்கள்!" என்கிறார் உடற்பயிற்சி நிலையமொன்றின் உரிமையாளரான விஜயலட்சுமி பந்தையன். "எத்தனை உயர்ந்த டிரெஸ் போட்டாலும் உடலின் வடிவமைப்பு காரணமாக நல்ல தோற்றம் இருக்காது. எப்போதும் சந்திக்கும் ஏளனப் பார்வையால் தன்னம்பிக்கை குறைந்து போய் மற்றவர்களுடன் இயல்பாகப் பழகுவதைக் கூட குறைத்துக் கொண்டு தனக்குள்ளேயே நத்தையாகச் சுருங்கிப் போய் விடுவார்கள்!" என்கிறார் இவர்.

"பிறர் கிண்டலும், கேலியும் செய்வதற்கு முன்னால் நம்மை நாமே கிண்டல் செய்து கொண்டு விட்டால் பிரச்னையே இல்லையே" என்று உற்சாகமாகச் சொல்கிறார் எஸ்.பி. பாலசுப்ரமண்யம். பல திரைப்படங்களில் அப்படிப்பட்ட டயலாக்குகள் பேசி நடித்தும் இருக்கிறார் எஸ்.பி.பி.

# அழகுதானே?

"என் உருவம் என்றைக்குமே எனக்கு மனரீதியான சிக்கல்கள் உண்டு பண்ணவில்லை" என்கிறார் இவர். இந்த ஆரோக்கிய கண்ணோட்டத்தினாலேயே இத்தகைய உற்சாகர்களின் தோற்றமும் ஒருவித ஜாலியான அழகுடன் நமக்குப் புலனாகிறது.

'கேளடி கண்மணி' திரைப்படத்தில் எஸ்.பி.பியின் இடையைச் சுற்றி இஞ்ச் டேப்பினால் ராதிகா அளக்கும் காட்சி கூட, இக்கட்டுரையின் ஆரம்பத்தில் சொன்ன குரூர ஜோக் மாதிரி இல்லாமல் மென்மையான மனிதநேய உணர்வுடன் நினைவில் நிற்கிறது.

"எனினும் என் மனைவிக்கு, இதுபோன்ற வேடங்களில் என்னை நானே கிண்டல் செய்து கொண்டு நடிப்பது கொஞ்சம் வருத்தமளிக்கிறது" என்கிறார் எஸ்.பி.பி.



உடற்பயிற்சி கோச்சாகப் பணிபுரியும் உமா, சில தம்பதிகளுக்கிடையே வெடிக்கும்

பிரச்னைகளைக் கூறுகிறார் :

"மனைவியின் பருமன் காரணமாகவே அவளை வெளியில் கூட்டிச் செல்லாத கணவர்கள் உண்டு! கட்டாக இருக்கும் பிற பெண்களைப் பார்த்து ஏக்கப் பெருமூச்சு விடுகிற 'சதிலீலாவதி' கணவர்களும் உண்டு!" என்கிறார் உமா.

ஆயினும் இதுபோன்ற பிரச்னைகள் இல்லையென்று அடித்துச் சொல்பவர் குண்டு கல்யாணத்தின் அம்மா. "என் கணவர் குண்டு கருப்பையாவும் குண்டுதான். கல்யாணம் தவிர மற்ற இரண்டு பெண்களும் குண்டுதான். என் மருமகள் சாந்தி வெளியில் அவனோடு சேர்ந்து போவதற்கெல்லாம் வெட்கப்படுவது கிடையாது. ஒரு பெண் குழந்தையும் இருக்கிறது!" என்கிறார் அவர்.

உடல் எடை அதிகமாவதற்குச் சாப்பாடு மட்டும்தான் காரணமா? "அது மட்டுமல்ல; தைராய்டு சுரப்பிகள் சரியாக இயங்காதது, அட்ரினல் சுரப்பி அதிகமாகச் சுரப்பது மற்றும் சில ஹார்மோன்கள் அதிகமாகச் சுரப்பது கூட உடல் பருமனுக்குக் காரணமாகி விடும்!'' என்கிறார்

## கோவை மாவட்ட வாசகர்களே...!

உங்களுக்கென்றே கல்கியில் சில பக்கங்கள் ஒதுக்கப் போகிறோம். அவற்றை உங்கள் 'கல கல' படைப்புகளால் நிரப்புங்கள் பார்க்கலாம்!

இதோ நிபந்தனைகள் :

- இப்போது கோவை மாவட்டத்தில் வசிப்பவர்கள் மட்டுமே எழுதலாம்.
- எழுதும் விஷயங்கள் - ஜோக், துணுக்கு, உண்மைச் சம்பவம், புது மரபுக் கவிதை, மாணவர் நியூஸ், நையாண்டி - என எதுவாயினும் போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதலாம்.
- எழுதப்படும் விஷயம் 'கலகல' என்று அமைய வேண்டியது கட்டாயம்.
- பிரசுரமாகும் படைப்புகளுக்குச் சன்மானம் உண்டு.
- உங்கள் படைப்புகளின் தரத்தைப் பொறுத்து அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வரை கலகல கோவை பகுதி தொடர்ந்து வெளியாகும்.
- தலைசிறந்த படைப்புக்குச் சிறப்புப் பரிசு உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- போஸ்ட் கார்ட் முகவரி பகுதியில் கலகல கோவை என்று குறிப்பிடவும்.

இதர மாவட்ட வாசகர்கள் பதற வேண்டாம்; உங்களுக்கும் வாய்ப்பு வரும்.

- ஆசிரியர்.

'கலகலகோவை' 'கலகலகோவை'

டாக்டர் கிருஷ்ணா ஹண்டே.

"நாம் சாப்பிடும் உணவுகளின் அளவுகளுக்குத் தகுந்த மாதிரி நமது உடல் உழைப்பும் அமைந்திருக்க வேண்டும். இல்லாதவர்கள் உடற்பயிற்சியாவது செய்ய வேண்டும். இரண்டும் இல்லாமல் போகும் போதுதான் செலவாகாத சக்தி நமது உடலில் ஆங்காங்கே கொழுப்பாகச் சேமிக்கப்படுகிறது; உடல் பருமனாகிறது!'' என்று சொல்லும் டாக்டர் கிருஷ்ணா நானூறுக்கும் மேற்பட்டவர்களின் உடலிலிருந்து அளவுக்கதிகமான கொழுப்பு செல்களை அகற்றியிருக்கும் ஒரு சர்ஜன்.

"லிபோ சக்ஷன், லிபெக்டமி போன்ற சிகிச்சைகளின் மூலம் கொழுப்பை அகற்ற முடியும் என்றாலும் நீங்கள் இருக்க வேண்டியதற்கு எவ்வளவு அதிக எடையுடன் இருக்கிறீர்களோ அது நீங்கள் நிரந்தரமாகச் சுமக்கும் ஓர் அநாவசிய மூட்டைதானே! அதனால் மற்றவர்களின் கேலிக்கு ஆளாவது மட்டுமல்ல; உடல் பருமனால் இருதயம் பாதிக்கப்படும் அபாயமும் உண்டு. இரத்தக் குழாய்களில் இந்தக் கொழுப்பு செல்களால் அடைப்பு ஏற்படும். நுரையீரல்கள் சரியாகச் சுருங்கி விரிய கஷ்டப்படும். நீரிழிவு, இரத்த அழுத்தம், மூட்டுக்களிலும் இடுப்பிலும் வலி என்று பல பிரச்னைகள். இத்தனையும் அதிக எடையால்தானே! ஆக, அதிக எடை என்பது அழகுப் பிரச்னை மட்டுமல்ல; ஆரோக்கியப் பிரச்னையுங் கூட!'' என்கிறார் டாக்டர் கிருஷ்ணா.

எஸ்.பி.பி.யின் சமீபத்திய கவலையும் இதுவே : "என் எடையைப் பற்றி காம்ப்ளெக்ஸ் இல்லாவிட்டாலும் கவலைப்பட வேண்டிய வயதை நான் எட்டி விட்டேன்" என்கிறார். எடையைக் குறைக்கும் முயற்சிகளிலும் ஈடுபட்டிருக்கிறார்.

இதனால் அவர் இமேஜ் பாதிக்கப்பட்டு விடாதா?

"நான் முதலில் பின்னணிப் பாடகன். எப்போதேனும் ஒருமுறைதான் நடிக்கிறேன். அதனால் இமேஜ் எனக்கு அவசியமில்லை; முக்கியமுமில்லை. மேலும், ஆரோக்கியம்தானே எல்லாவற்றையும் விட முக்கியம்; அது இல்லாவிட்டால் பாலு ஏது...?" என்கிறார்.

"உங்கள் வாய்க்குச் சர்க்கரை போடலாம் சார்!"

"ஊஹூ“ம்! மூச்! ஐ ஆம் ஆன் ஏஸ்டிரிக்ட் டயட்" என்கிறார் எஸ்.பி.பி!

— **நிர்மலா சக்ரவர்த்தி**

அட்டை வண்ணப்படம் : **யோகா**

# “நாங்கள் ஆளுங்கட்சியால் மிரட்டப்படுகிறோம்!”

## – கேபிள் டீ.வி.

## ஆபரேட்டர்களின் குமுறல்!

‘ஜே ஜே’ என்று கூட்டங்கள் நடக்கின்றன! மாவட்டந்தோறும் மீட்டிங் போட்டு, பிள்ளை பிடிப்பது போல் கேபிள் டீ.வி. ஆபரேட்டர்களை அமுக்கிப் பிடிக்கிறது ஜெ.ஜெ. டீ.வி.யின் சகோதரி (தோழி!) நிறுவனமான சூப்பர் டூப்பர் டீ.வி. ப்ரைவேட் லிமிடெட். ‘ஜெ.ஜெ. டீ.வி.யை மட்டுமே ஒளிபரப்ப வேண்டும்’ என்று மிரட்டப்படுகிறார்களாம் இந்த வீடியோகஸ்தர்கள். வணிகவரித்துறை அதிகாரிகள், போலீஸ்காரர்கள், ஆளும் கட்சி அடியாட்கள் என்று மூன்று தரப்புக் கூட்டணி கேபிள் டீ.வி. நடத்துபவர்களைக் கிடுக்கிப்பிடி போட்டுப் பிடிக்கிறது.

சமீபத்தில் சென்னையில் சூப்பர் டூப்பர் டீ.வி. கூட்டிய கூட்டத்தில் கலந்து கொண்ட ஆபரேட்டர்கள் ‘முகம்’ தெரியக் கூடாது என்ற கண்டிஷனுடன் நம்முடன் பேசினார்கள்:

“இத்தனை மணிக்கு இந்த இடத்தில் மீட்டிங் என்று மூன்று தந்திகள் அனுப்பினார்கள். தவிர, லோகல் போலீஸ் இன்ஸ்பெக்டரும், தம் பங்குக்கு மிரட்டுகிற தொனியில் மீட்டிங்குக்குத் தவறாமல் வரவேண்டுமென்று சொல்லிவிட்டுப் போனார். அமைச்சர் ஜெயக்குமார், கொறடா ஜெயக்குமார் ஆகியோரின் உதவியாளர்களும் ‘ஆபரேட்டர்கள் கண்டிப்பாகக் கூட்டத்துக்கு வந்தாக வேண்டும்’ என்று சொல்லிவிட்டுப் போனார்கள். கூட்டத்தில் எழுநூறுக்கும் மேற்பட்டவர்கள் வந்திருந்தார்கள். கரை போட்ட வேட்டிகள், மலர் மாலைகள் என்று ஓர் அரசியல் கட்சியின் கூட்டம் போலவே இருந்தது அது. மேடையில் இருந்த திவாகருக்கு (சசிகலாவின் சகோதரர்) மாலைகள் போடப்பட்டன. நாங்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதைக் கூட ‘பாதுகாவலர்கள்’ (மப்டி போலீஸ்) தடுத்தார்கள். யாரோ ஒருவர் சிரித்தார். உடனே திவாகர், ‘எதுக்காகச் சிரிக்கிறீங்க?’ என்று கடுப்புடன் எச்சரித்தார்.

“எல்லோருக்கும் விண்ணப்ப ஃபாரம் கொடுக்கப்பட்டது. அதைப் பூர்த்தி செய்து ஐயாயிரம் கட்ட வேண்டுமென்று “அன்பு” வேண்டுகோள் விடப்பட்டது.

“நிபந்தனைகள் எதுவும் விண்ணப்ப படிவத்தில் இல்லாத நிலையில் ‘எல்லா நிபந்தனைகளையும் ஏற்கிறோம்’ என்று கையெழுத்து வாங்கப்பட்டது. விஷயம் என்னவென்றால் ஐயாயிரம் ரூபாய் கொடுத்துப் பதிவு செய்து கொண்டால், பின்னர் நேர்முகத் தேர்வு நடத்தி (சென்னையில்) நாற்பது பேரைத் தேர்ந்தெடுப்பார்களாம். அவர்களுக்கு 85,000 ரூபாய் மதிப்புள்ள டிஷ் ஆன்டெனா, மற்றும் தேவையான உபகரணங்கள் கடனாகக் கொடுக்கப்படுமாம். பிறகு மாதத் தவணையில் இதை அடைக்க வேண்டும்.

“டிஷ் ஆன்டெனா வைக்கப்படும் கோணத்தில் ஜெ.ஜெ. டீ.வி. தவிர கோல்டன் ஈகிள் மற்றும் ஏ.டி.என். ஆகிய மூன்று நிகழ்ச்சிகள்தான் வருமாம். போகப் போக(?) நாற்பது சேனல்கள் வரை காட்டுவதற்கு ஏற்பாடு செய்வார்களாம். கூட்டம் நடந்த அன்று மட்டும் சுமார் இருபது லட்சத்துக்கு மேல் பதிவுக் கட்டணமாக வசூலித்தார்கள். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைத் தவிர மற்றவர்களுக்குப் பணத்தைத் திருப்பித்தர மாட்டார்களாம். ‘இந்த ஐயாயிரம் ரூபாய் ரசீதை வைத்துக் கொண்டால் உங்களுக்கு எந்தத் தொந்தரவும் வராது’ என்று சொன்னார்கள். ‘கூட்டத்துக்கு வரமுடியாது’ என்று தைரியமாகச் சொன்ன சிலருக்கு வணிக வரித் துறையிலிருந்து வரி கட்டுமாறு நோட்டீஸ் போயிருக்கிறது. இத்தனைக்கும் கேபிள் டீ.விக்கு வரி போட்டதை எதிர்த்துத் தடை வாங்கி, விஷயம் சுப்ரீம் கோர்ட்டில் இருக்கிறது. சேலத்தில் கூட்டிய கூட்டத்தில்



கலந்து கொள்ளாத விடியோகஸ்த்ர்களின் 'டிஷ்'கள், கண்ட்ரோல் பேனல்கள் அடியாட்களால் உடைக்கப்பட்டிருக்கின்றன!'' என்று புலம்பினார்கள் அவர்கள்.

தமிழ்நாட்டில் உள்ள பத்தாயிரம் கேபிள் டீ.வி., செயற்கைக் கோள் டீ.விக்களுக்கு டிஷ் ஆன்டெனா, மற்றும் உபகரணங்கள் கொடுக்க, ஐம்பது - அறுபது கோடி ரூபாய் செலவாகும். முதல்வரின் வீட்டில் டிஷ் போட்டுள்ள சுலீவன் வேலி (Sullivan Valley) கார்ப்பரேஷன் என்ற அமைப்புதான் மொத்த காண்ட்ராக்டாம்.

''ஜெ.ஜெ. டீ.வியை நாங்கள் ஒளிபரப்ப மாட்டோம் என்று சொல்லவில்லை. அதையும் சேர்த்து ஒளிபரப்புவோம். அதை மட்டும்தான் ஒளிபரப்ப வேண்டும் என்று கட்டாயப்படுத்துவதேன்? சரி, அப்படியே நாங்கள் ஒளிபரப்ப ஆரம்பிப்பதாக வைத்துக் கொண்டால் எங்களிடம் ஏற்கெனவே இருக்கும் டிஷ்களையும் உபகரணங்களையும் என்ன செய்வது? தவிர, சூப்பர் டூப்பர் நிறுவனத்தினர் குறிப்பிட்ட ஏரியாவில் ஒருவரைத் தேர்ந்தெடுத்தவுடன், மற்றவர்களைப் 'பிழைப்பு' நடத்தவிடுவார்கள் என்பது என்ன நிச்சயம்? எதேச்சாதிகாரத்தால் எங்களை அமுக்க மாட்டார்களா? ஆதலால் எங்கள் நிலை பரிதாபம்தான்'' என்று சோகப் பாட்டுப் பாடினார்கள் கேபிள் டீ.வி. ஆபரேட்டர்கள்.

ஆளும் கட்சி இப்படி எதேச்சாதிகாரத்தைக் கட்டவிழ்த்துவிடக் காரணம், அடுத்த தேர்தலின்போது ஜெ.ஜெ. டீ.வியைப் பிரசாரத்துக்குப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கில்தான் என்கிறார்கள். சன் டீ.விக்காரர்கள், தி.மு.க. சார்பாக பிரசாரம் செய்வார்கள் என்ற பயத்தின் காரணமாகவும் ஜெ.ஜெ. டி.வி., அவர்களை முந்திக் கொள்ளப் பார்க்கிறது.

இவை ஒருபுறமிருக்க, பிசினஸ் இந்தியா பத்திரிகை நிறுவனம் பெரிய அளவில் செயற்கைக் கோள் தொலைக்காட்சி சேனல்களை நடத்தப் போகிறது. சமீபத்தில் சென்னையில் பத்திரிகையாளர்களைச் சந்தித்த அதன் உரிமையாளர்கள், ''ஆளும் கட்சியின் அதிகார துஷ்பிரயோகத்தை தேசிய அளவில், பாராளுமன்றத்தில் வெட்டவெளிச்சமாக்குகிறோம்; நீங்கள் பயப்பட வேண்டாம்'' என்று கேபிள் டீ.விக்காரர்களுக்கு வாக்குறுதி கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்களாம்! நாடாளுமன்றத்தில் பிரச்னையை எழுப்பிவிட்டால் இங்கே விடிவு காலம் பிறந்துவிடப் போகிறதா என்ன?

- ப்ரியன்

## சமீபத்தில் பிரபலமான ரஷ்ய ஜோக்

வெகுநேரம் கால்கடுக்க ரேஷன் 'கியூ'வில் நின்று கொண்டிருந்த ரஷ்ய சாமானியன் ஒருவன், ''நாட்டின் இந்த நிலைமைக்குக் காரணம் கோர்ப்பச்சேவ்தான்; அவரைக் கொன்றுவிட்டுத்தான் மறுவேலை பார்க்கப் போகிறேன்'' என்று முனகியபடியே 'கியூ'வை விட்டு விலகினான்.

சற்று நேரத்திற்கெல்லாம் மறுபடியும் 'கியூ'வில் வந்து நின்று கொண்ட அவனை, ''என்ன ஆச்சப்பா?'' என்று அங்கிருந்தவர்கள் ஆச்சரியத்துடன் வினவினார்கள்.

அதற்கு அவன், ''கோர்ப்பச்சேவைத் தீர்த்துக்கட்ட நினைக்கும் ஆட்களின் 'கியூ' பத்து மடங்கு நீளமாயிருக்குங்க'' என்றான் சோர்வுடன்.

- ஜெ. சராதா





பெங்களூர் வசந்த நகரில் ஒரு கார்ப்பரேஷன் குழந்தைகள் பள்ளியின் அடுத்த கட்டிடத்திலேயே ஒயின் கடை திறக்கப்பட்டதை எதிர்த்து அப்பகுதி மக்கள் கிளர்ச்சி செய்தனர். சட்டத்தையும் புறக்கணிக்க முடியாது, செல்வாக்கான மது வியாபாரியையும் பகைத்துக் கொள்ள முடியாது என்ற நிலையில் அதிகாரிகள் ஒரு சுலபமான தீர்வு கண்டார்கள். பள்ளியின் 'கேட்'டை வேறு பக்கத்துக்கு மாற்றி விட்டார்கள்! குழந்தைகள் சுற்றிச் செல்ல வேண்டியிருக்கிறது. ''இனி, கோவில்கள், மருத்துவமனைகள் பக்கத்தில் மதுக்கடைகள் திறக்கப்பட்டாலும் இதே முறையைப் பின்பற்ற வேண்டியதுதானா?'' என்று பொருமுகிறார்கள் பொது மக்கள்.

''இந்தியன் எக்ஸ்பிரஸ்''

தகவல் : அ. ஷண்முகசுந்தரம்



# சத்யபாலா நிதி லிமிடெட்



**மத்திய அரசின் அங்கீகாரம் பெற்ற**
**"பரஸ்பர சகாய நிதி" நிறுவனம்**

**Nidhi Company Approval No : 37/27/93-CL III**

சரவணா காம்ப்ளக்ஸ் எண் 36, பிள்ளையார் கோயில் தெரு, பல்லாவரம், சென்னை - 43

**Tel : 405788/404351, Fax : 044-402981, Grams : "SATYABALA"**

| பாதுகாப்பு பெட்டக வசதி உண்டு | வயதானோர் மற்றும் மகளிருக்கு கூடுதல் 0.5% வட்டி மற்றும் சிறப்புப் பரிசு | சிறப்பு டெபாசிட் சேகரிப்பு மாதம் |
|---|---|---|

**பிக்சட் டெபாசிட் :**

| 46 நாட்கள் | 90 நாட்கள் | 6 மாதங்கள் | 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் | 4 ஆண்டுகள் | 5 ஆண்டுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

*** 5 வருடங்களுக்கு–டெபாசிட் ரூ.50,000 அதற்கு மேலும் – வட்டி 21%**

**சிறப்பு டெபாசிட் திட்டங்கள்**

| டெபாசிட் ரூ | ஆண்டுகள் | திரும்பக் கிடைக்கும் தொகை ரூ |
|---|---|---|
| 600/- | 25 | 60,000 |
| 4500/- | 12.5 | 50,000 |
| 6500/- | 15 | 1 லட்சம் |
| 9500/- | 20 | 5 லட்சம் |
| 20,000/- | 25 | 25 லட்சம் |

**சத்யபாலா மறுமுதலீட்டுத் திட்டம்**

| டெபாசிட் ரூ | மாதங்கள் | திரும்பக் கிடைக்கும் தொகை ரூ |
|---|---|---|
| 5000/- | 45 | 10,000/- |
| 10,000/- | 68 | 30,000/- |
| 25,000/- | 90 | 50,000/- |

* வட்டிக்கு முன்தேதியிடப்பட்ட காசோலைகள்!

*** உடனடி வட்டி டெபாசிட் திட்டம்**

ரூ 5000/-மும் அதற்கு மேலும் 1 ஆண்டுக்கு டெபாசிட் செய்து வட்டி ரூ 725/- உடனடியாக பெறுவீர்.

*** பிறந்த நாள் சிறப்பு டெபாசிட் திட்டம் :**

உங்கள் குழந்தைகளின் ஐந்து பிறந்த நாளன்று ரூ. 1000-ஐ டெபாசிட் செய்தால் 6-ஆவது பிறந்த நாளிலிருந்து ரூ 1500-ஐ பிறந்த நாள் பரிசாக 50 ஆண்டுகள் பெறலாம்.

* குறைந்த வட்டிக்கு கலப தவணையில் நகை (கி. ரூ. 325/- வரை) மற்றும் அடமானக் கடன்
(No Area Restriction)

| தலைவர் | செயலாளர் | நிர்வாக ஆலோசகர் |
|---|---|---|
| நீதியரசர் G. இராமானுஜம் (ஓய்வு பெற்ற சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி) | திருமதி. இந்திராணி, M.A. B.Ed., | ஆடிட்டர் திரு. G. கனகராஜ். B.Com., F.C.A. |



**இதர குரூப் நிறுவனங்கள்**

சத்யபாலா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட் (Deposits, Hire Purchase, Leasing)
சத்யபாலா பைனான்சியல் சர்வீஸஸ் (OTCEI Dealer - Stock & Share Brokers, Loan Syndication)

**கிளைகள் :** பம்மல், பட்டாபிராம், மேற்கு மாம்பலம், மதுரை, திருப்பூர், இராஜபாளையம், மற்றும் **விரைவில்** தமிழகமெங்கும்.

**நிறைவான சந்தோஷத்திற்கு! நிம்மதியான வாழ்க்கைக்கு! நாடுங்கள் உங்கள் சத்யபாலாவை**

# Kalki Shopping Page

திருமண ஏற்பாடுகளை
எங்களிடம்
விட்டுவிடுங்கள்!

சாப்பாடு, டிபன், காபி, சீர்வரிசைகள், பக்ஷண வகைகள், புஷ்பம், மேளம், இன்னிசை மற்றும் சகல விதமான திருமண ஏற்பாடுகளையும் காண்ட்ராக்ட் முறையில் சிக்கனமாகவும் சிறப்பாகவும் செய்துதர காத்திருக்கிறோம்.

தொடர்புகொள்ள வேண்டிய முகவரி

**JEEKAY CATERING CONTRACTORS**

G. கிட்டப்பா (தஞ்சை ஆனந்தா லாட்ஜ்)
Flat No.3, "Aiswarya Apts."
33, வெங்கட்ராமன் தெரு, தி. நகர்,
சென்னை - 17 போன்: 8240276

---

## RANEE SAREES
### OTHER SUNGUDI SAREES

**10% DISCOUNT ON BENGAL COTTON SAREES**

**BEST QUALITY, ATTRACTIVE DESIGNS & COLOURS**

**MADURAI TEXTILES**

2, SIVAPRAKASAM ROAD,
PONDY BASAAR,
MADRAS-17
(Nearer to Vegetable Market)

AVAILABLE ON WHOLE SALE ALSO.

---

சேமிப்பு வீட்டுக்கும் நல்லது; நாட்டுக்கும் நல்லது.

ஸ்ரீ ராமபிரானுக்கு பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மண் சுமந்தது.
உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்.

## நடராஜ் ஃபைனான்ஸ் அளிக்கிறது

**24% P.A. +4% GIFT +1% PENSONERS**

90 DAYS 180 DAYS 12 MONTHS 24 MONTHS 36 MONTHS

- ★ 90 நாட்களுக்குப் பிறகு மீண்டும் ரினிவல் செய்து கொள்ளலாம்.
- ★ ஒவ்வொரு ரினிவலுக்கும் GIFT உண்டு.
- ★ 36-மாதங்களுக்கு ரூ. 12000 டெபாசிட் செய்து 3 சவரன் தங்கம் பெறலாம்.
- ★ 36-மாதங்களில் உங்கள் டெபாசிட் இரண்டு மடங்கு ஆகிறது.
- ★ மாத தவணை மூலம் பண்ணை வீடுகளை சொந்தமாக்கிக் கொள்ளலாம்.
- ★ வெளியூர் அன்பர்களும் சேரலாம். சீட்டுக் குழுக்களில் லோன் வசதி உண்டு.



**CALL 434 2098, 484 0150**



**NATARAJ FINANCE & INVESTMENTS**
**NATARAJ CHITS (TAMILNADU) Pvt. Ltd.,**
NATARAJ ESTATE - FARM HOUSE PROMOTERS,
"Shanthi Complex", 3rd Floor, 26-Ranganathan St., T. Nagar, Madras - 600 017.
B.O. 1-B, KAMARAJAR ROAD (upstair), KANCHEEPURAM - 631 501.

NATARAJ OIL MILLS & NATARAJ EXPORTS OVERSEAS (Regd. Office.)

# Kalki Shopping Page

## GENUINE DISCOUNT SALE

AT

# C.P.ART CENTRE

Eldams Road, Alwarpet, Madras - 18

## MADURAI SUNGUDI SAREES

**Organisers:-** Vaithiam

**PARVATHA SAREES, Madras-4.**

&

**FOLLOW - MEE**

**House of Exclusive Sarees & Salwars**

**(Tailoring Attached)**

DATE : 29/3/95 TO 2/4/95

TIME : 10.00 AM TO 8.00 PM.

---

**ஆரோக்கியத்திற்கு அணியுங்கள்**
**அக்குபிரஷர் காலணிகள்**

தினசரி 20 நிமிடங்கள் வெற்று வயிற்றில் காலில் அணிந்து நடக்க வேண்டும்.
உடலில் உள்ள 38 உறுப்புக்களின் தொடர்புடைய புள்ளிகளை அழுத்தம் செய்து ஆரோக்கியத்தை மேம்படுத்துகிறது.



அக்குபிரஷர் காலணியை பதிவுத்தபால் மூலம் பெற ரூ.180/- அனுப்புக. V.P.P. கிடையாது.

**காந்த சிகிச்சை ஆராய்ச்சி நிறுவனம்**

38/4, சன்னதி தெரு,
தேரடி பஸ் ஸ்டாப், திருவொற்றியூர், சென்னை-600 019.
வேலை நேரம் : காலை 9-30 To 12-00, மாலை 4-00 To 7-30

---



ADYAR

# STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC & MANUAL TYPING
BINDING & LAMINATION

"இப்படியொரு பிரச்னையைக் கிளப்பித்தானே விருது தந்தார்கள் என்கிற வலி இதயத்தின் ஒரு மூலையில் இருக்கவே செய்கிறது!"

# தமிழுக்கு ஆசைப்படும் மலையாள நாயகி!

திருவனந்தபுரம். 'காட்டன் ஹில் ஹைட்ஸ்' என்கிற வானைத் தொடும் கட்டடத்தின் ஒன்பதாவது மாடியிலுள்ள ஃபிளாட். அங்குதான் புதிதாகக் குடிவந்திருக்கிறார் சாந்தி கிருஷ்ணா. அண்மையில், கேரள மாநில அரசின் சிறந்த நடிகைக்கான விருது பெற்றவர். வீட்டு வேலைகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்தவரிடம் நம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு, கேள்விகளை மலையாளத்தில் ஆரம்பித்த போது குறுக்கிட்டார்.

"நான் பாலக்காட்டுக்காரிதான். நன்றாகவே தமிழ் தெரியும். கேள்விகளை நீங்கள் தமிழிலேயே கேட்கலாம்!"

"கேரள மாநில அரசின் சிறந்த நடிகைக்கான விருது பெற்றுத் தந்த 'சகோரம்' படம் பற்றிச் சொல்லுங்களேன்!"

"அந்தப் படத்தில் எனது கேரக்டரின் பெயர் சாரதாமணி. 35 வயதாகி



யும் திருமணமாகாதவள். எனது வருமானத்தை நம்பித்தான் எனது குடும்பமே இருக்கிறது என்பதால், பெற்றோரும் எனது திருமணம் பற்றிச் சிந்திக்காமலேயே இருக்கிறார்கள். இந்த நிலையில்தான் முன்னாள் இராணுவத்தினராக வரும் நடிகர் முரளியுடன் நட்பு ஏற்பட்டு, அதுவே காதலாகவும் மலருகிறது. இதற்குக் குடும்பத்தினர் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். இருப்பினும் எனது நல்ல வாழ்க்கைக்காக நான் உறுதியுடன் நின்று போராடுகிறேன்... இப்படிப் போகிறது கதை. பெண்களுக்குத் தன்னம்பிக்கையூட்டக்கூடிய கேரக்டர் என்பதால், என்னால் முழு ஈடுபாட்டுடன் நடிக்க முடிந்தது."

"நீங்கள் இந்தப் படத்தில் சொந்தக் குரலில் பேசி நடிக்காததால் இந்த விருது தரக் கூடாதென்று தேர்வுக் கமிட்டி நடுவராயிருந்த நடிகை ஜெயபாரதி கூறினாராமே?"

"விருது பெறுவதற்குச் சொந்தக் குரலில்தான் பேசி நடிக்க வேண்டும் என்கிற ஜெயபாரதியின் கருத்து மிகவும் தவறானது. சொந்தக் குரலில்தான் பேச வேண்டுமென்றால், சொந்தக் குரலில் பாடவும் வேண்டுமே! அதற்கு மாத்திரம் பின்னணிக் குரலை அனுமதிக்கலாமா? என்னுடைய நடிப்பைப் பலரும் பாராட்டுகிற நேரத்திலும் - கேரள அரசின் விருது பெற்ற இந்த மகிழ்ச்சியிலும் - இப்படியொரு பிரச்னையைக் கிளப்பித்தானே விருது தந்தார்கள் என்கிற வலி இதயத்தின் ஒரு மூலையில் இருக்கவே செய்கிறது!"

''இதுதான் உங்களுக்குக் கிடைத்த முதல் விருதா?''

''92-ல் வெளியான 'சவிதம்' என்ற படத்தில் நடித்ததற்காகச் சிறந்த துணை நடிகைக்கான விருது கிடைத்தது. அதுவும் கேரள அரசின் விருதுதான். அப்புறம், சர்வதேச விருது பெற்ற படமான 'இலையும் முள்ளும்' படத்தில் நானும் ஒரு கேரக்டரில் நடித்திருக்கிறேன் என்பதே மகிழ்ச்சிக்குரிய ஒரு விஷயம்தானே!''

''தமிழ்ப் படங்களில் நீங்கள் தொடர்ந்து நடிக்க முடியாமல் போனதற்கு என்ன காரணம்?''

''எனக்குத் தகுந்த மாதிரியான கேரக்டர்களில் நான் நடிக்காததால் தொடர்ந்து வாய்ப்புகள் வராமல் போயிருக்கலாம். அப்படி வராமல் போனதில் எனக்கும் வருத்தந்தான். ரஜினி, கமல், சத்யராஜ் போன்ற முன்னணி நடிகர்களுடன் நடிக்க எனக்கும் ஆவலாகத்தான் இருக்கிறது. நல்ல கதாபாத்திரம் கிடைத்தால் தமிழில் நடிப்பதற்கும் நான் தயாராயிருக்கிறேன்.''

''முன்பு நீங்கள் சினிமாவில் நடிப்பதையே நிறுத்தியிருந்தீர்கள், இல்லையா?''

''ஆமாம். 83-ல் நிறுத்தினேன். 84-ல் ஸ்ரீநாத்துடன் திருமணம். நான் தமிழ்; அவர் மலையாளி. எங்களுக்கு ஒரு பெண் குழந்தையும் பிறந்தது. பிறகு அது இறந்து விட்டது. அது ரொம்பவும் என்னைப் பாதித்து விட்டது. அதிலிருந்து மீளவே நான் மீண்டும் 90-ல் நடிக்க ஆரம்பித்தேன். இப்படி நான் மீண்டும் நடிக்க வந்தது கூட இன்னும் பல பேருக்குத் தெரியாது.''

''நீங்கள் படங்களில் பரதநாட்டியம் ஆடும் போது அது படத்திற்கான நாட்டியமாக மட்டுமல்லாமல் உங்களுக்கு முறையாகவே நாட்டியம் தெரியும் என்பது போல் இருக்கிறதே?''

''நான் முறையாக பரதநாட்டியம் பயின்றவள்தான். எனது குரு கலைமாமணி மகாலிங்கம் பிள்ளை. நானும் முன்பு முப்பது மாணவிகளுக்கு நாட்டியம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தேன். இடையில் ஏற்பட்ட குடும்பப் பொறுப்பு காரணமாக தொடர்ந்து என்னால் பாடம் சொல்ல முடியவில்லை. இனிமேல் அதையும் துவங்கலாமென்றிருக்கிறேன். எனக்கு ஆத்ம திருப்தி தரும் விஷயம் அது!''

''மலையாளப் படங்களுக்கும் தமிழ்ப் படங்களுக்கும் என்ன வித்தியாசம்?''

''தமிழ்ப் படங்கள் பெரும்பாலும் கமர்ஷியல் அடிப்படையிலேயே எடுக்கப்படுகின்றன. பெரும்பாலான மலையாளப் படங்களோ யதார்த்தமான கதைகளை அடிப்படையாகக் கொண்டு எடுக்கப்படுகின்றன. இதுதான் வித்தியாசம்!''

பேட்டி : **ந. சுந்தர்**

''அந்த எம்.எல்.ஏ., ஏன் போர் வாளை இடுப்புல சொருகிக்கிட்டு சட்டசபைக்குப் போறாரு?''

''அவர் ராஜபரம்பரையைச் சேர்ந்தவராம்... மைக், சேர் எல்லாம் எடுத்து சண்டை போட மாட்டாராம்!''

— நெல்லை ஜெயாப்ரியா



எழுதிக் கொடுத்ததைப்
படிக்கிறது உன்
வேலை... எனக்கு
நாளை சூட்டிக்கிறது
புகழ் மாலை...!

சட்டமன்
றத்தில்
ஆளுநர்
உரை

ஒரு ஆட்சி
பற்றிய அறிவிப்பு
காத்திருங்கள்









ஸ்ரீ
# கல்கி



1995
மார்ச் 26
பவ
பங்குனி 12
மலர் : 53
இதழ் : 34


# ஏழைமை ஒழிப்போம்! லஞ்சத்தில் கொழிப்போம்!

நாட்டிலுள்ள மலைமுழுங்கி மகாதேவர்கள் மகிழ்ந்து போகலாம்! அரசியல் கட்சிக்காரர்களின் உள்ளங்கைகள் ஏற்கெனவே அரிக்க ஆரம்பித்திருக்கும்! 75 ரூபாய் பென்ஷன், நாடு தழுவிய மதிய உணவுத் திட்டம், பத்து லட்சம் வீடுகள், கிராமப்புற மக்கள் இன்ஷுரன்ஸ் திட்டம் என்று பட்ஜெட்டில் ஏராள சமுதாய நலத் திட்டங்கள் அறிவிக்கப்பட்டுள்ளன!

வரிசையாக நடந்து முடிந்துள்ள மாநிலத் தேர்தல்களில் காங்கிரஸ் அடைந்துள்ள தோல்விகள், விரைவில் வரவிருக்கும் நாடாளுமன்றத் தேர்தல், 'காங்கிரஸின் தோல்விக்கெல்லாம் புதிய பொருளாதாரக் கொள்கைதான் காரணம்' என்பதாக அர்ஜுன்சிங் போன்றோரின் அசட்டு வாதம் எல்லாம் சேர்ந்து கொண்டு நரசிம்மராவ் அரசை ஒரு கலக்குக் கலக்கி, 'ஏழைமை ஒழிப்போம்' கோஷத்துக்குப் புத்துயிரும் புதிய வடிவமும் தந்துள்ளன. இந்த அரசியல் நிர்ப்பந்தங்களுக்கு நிதி அமைச்சரும் வளைந்து கொடுத்திருக்கிறார்.

பூனைகளுக்கு இடையே வெண்ணெயைப் பகிர்ந்து அளிப்பதாகக் கூறி, சகலத்தையும் விழுங்கி ஏப்பம்விட்ட குரங்கின் கதை நமக்குத் தெரியும். அதுதான் 'ஏழைமையை ஒழிப்போம்' திட்டத்தின் பழைய சரித்திரம். இனி நடக்கப் போவதும் அதுதான். ஏழைகளின் நிலை ஓர் அங்குலமும் உயராது!

'ஏழைகளுக்கு உதவ உருவாகும் திட்டங்கள் சரியான முறையில் அமுல்படுத்தப் படுகின்றனவா என்று மேற்பார்வையிட சம்பந்தப்பட்ட ஒவ்வோர் அமைச்சகத்திலும் ஒரு தனி இலாகா அமைக்கப்படும்' என்ற அறிவிப்பு ஏற்கெனவே வந்துவிட்டது. அதாவது, புதிய உத்தியோகஸ்தர்கள், அவர்களுக்கு ஐந்து இலக்க சம்பளம், ஏஸி அறை, மேஜை - நாற்காலி - சோபா செட்டுகள், பங்களா, கார் - ஃபோன் வசதிகள், உதவியாளர்கள், டைப்பிஸ்டுகள் என்று எல்லாம் பெருகப் போகின்றன. இவர்கள் முழுங்கியது போக, மிச்சமுள்ள பணத்தில் சமுதாய நலத்திட்டங்களை அமுல்படுத்த வேண்டிய மாநில அரசு அதிகாரிகள், அரசியல் வாதிகள், வட்டாரக் கட்சித் தலைவர்கள் - அரசு ஊழியர்கள், மற்றும் காண்டிராக்டர்கள் முதலியோர் கபளீகரம் செய்தது போக, மிச்சம் மீதி ஏதாவது இருக்குமானால் அது ஏழை பாழைகளைச் சென்று அடையும்!

இந்நாட்டிலுள்ள கோடானு கோடி ஏழைகளின் நிலையை உயர்த்த இதுவா வழி? எழுபது சதவிகிதத்துக்கு மேல் விவசாயிகள் நிறைந்த நாட்டில், அவர்களுக்கு ஆண்டு முழுவதும் வேலை இருப்பதில்லை. ஏழைமைக்குக் காரணம் இதுவே. எனவே, விவசாயத் தொடர்புள்ள சிறிய - பெரிய தொழில்கள் தொடங்க ஊக்கமளித்து, கிராமப்புறங்களில் அவை அமைய வசதிகள் செய்தளித்து, வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதே நிரந்தரப் பரிகாரம். கூடுதல் வருவாய் கிடைத்தால் அவர்கள் வாழ்க்கைத்தரம் தன்னால் உயரும். மாறாக, இலவசங்கள் அவர்களைச் சென்றடைவதே சந்தேகம் என்பதோடு, இவ்வாறு பெறப்படும் பொருள்களில் அவர்களுக்குப் பிடிமானமும் இராது. சோம்பலையே வளர்க்கும்.

இந்த விஷயத்தை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் பட்ஜெட், சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் தொழில் வளர்ச்சிக்கும் பொருளாதார முன்னேற்றத்துக்கும் முன்னிலும் அதிகமாக மிக நல்ல அம்சங்களை உள்ளடக்கியிருக்கிறது. சுதந்திர பாரதத்தில் இதுநாள்வரை இருந்து வந்துள்ள நிதி அமைச்சர்களில் மிகச் சிறந்தவர் மன்மோகன் சிங் என்பதை மீண்டும் ஒருமுறை நிரூபித்துள்ளார்.

அரசாங்கத்தின் உற்பத்திக்கு உதவாத ஆடம்பரச் செலவினங்களையும், அரசியல் கண்ணோட்டத்துடன் நடக்கும் வீண் செலவுகளையும் கட்டுப்படுத்த முடியாததுதான் அவர் பலவீனம். இதில் மட்டும் அவர் வெற்றி பெற்றுவிட்டால், பட்ஜெட் பற்றாக்குறையும் அதன் விளைவான பணவீக்கமும் விலைவாசி உயர்வும் கட்டுப்பட, அதன் மூலமே ஏழைமை ஒழிப்பு ஐம்பது சதம் நிறைவேறிவிடும்!

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்



• பொறுப்பற்ற பேச்சு



• தேவை: கவர்ச்சித் தலைவர்!



• சஹஸ்ரநாமம்!

கொள்ளாததால் சுற்றுலா பயணிகளின் வருகை குறைந்து விட்டது. அரசு கவனிக்குமா?

! பயணிகள் வருகை குறைந்தால் பரவாயில்லையே; விலங்குகளின் எண்ணிக்கை குறையும் ஆபத்து அதைவிடப் பெரிதாயிற்றே! அதற்காகவாவது அரசு கவனித்தால் தேவலாம்தான்.

● புளியரை கணேசன், சென்னை.

? 'காங்கிரஸில் கவர்ச்சித் தலைவர் இல்லை' என்று வாழப்பாடி குறைப்பட்டுள்ளாரே,

# காங்கிரஸில் கவர்ச்சி அரசியல்

● தி.மா. தமிழழகன், திருச்சி.

? 'சந்திரிகா மீது நம்பிக்கை இழந்து வருகிறோம்' என விடுதலைப் புலிகள் அறிக்கை விடுத்துள்ளனரே?

! ஆயுதம் ஏந்துவதில் அவர்களுக்கு உள்ள துணிவு, ஆயுதங்களைத் துறப்பதிலும் தேர்தலைச் சந்திப்பதிலும் இல்லாததுதான், காரணம்.

● எஸ்.வி. பிரதா, சென்னை - 87.

? ஏன் பெண்களுக்குக் காவேரி, பவானி என்று ஆறுகளின் பெயர்களை வைக்கிறார்கள்?

! 'ஒரு குடம் தண்ணிக்கு வழியைக் காணோம், பேரு மட்டும் காவேரி!' என்று அலுத்துக் கொள்ள வசதியாயிருக்குமே, அதுக்குத்தான்.

● ஜெ. கண்ணன், சென்னை - 101.

? ஒரு சட்டை வாங்குவதென்றால் கூட நாலு கடை ஏறி இறங்கி வாங்கும் மக்கள், வோட்டு போடும் போது மட்டும் கொஞ்சம் கூட யோசிக்காமல் வோட்டுப் போடுகிறார்களே?

! சமீபத்திய மாநிலத் தேர்தல் முடிவுகள் அத்தகைய எண்ணத்தை உருவாக்கவில்லை. வரிசையாக எல்லா மாநிலங்களிலுமே ஆளும் கட்சியை மண் கவ்வச் செய்து தங்கள் அதிருப்தியைத் தெரிவித்து உள்ளனர். ஆனால் துரதிர்ஷ்டம் என்னவெனில் புதிதாக ஆட்சிக்கு வருகிறவர்கள், தங்களையும் மக்கள் இப்படித்தான் தூக்கி எறிவார்கள் என்பதை மறந்து, சாசுவத பதவி என்று எண்ணிக் கொண்டு, ஆணவம் தலைக்கேற, தவறுக்கு மேல் தவறு செய்து மக்களின் அதிருப்திக்கு உள்ளாவது தான்.

● ஏ. செந்தில் குமார், சூலூர்.

? முதுமலை சரணாலயத்தை அரசு கண்டு

வைஜெயந்திமாலா இல்லையா?

! வாழப்பாடி மதிப்பீட்டில் இதாலியக் கவர்ச்சிக்கே அதிக மார்க்!

● சூர்யாநிலா, சேலம்.

? 'ஜெ. ஆட்சிக் காலத்தில்தான் இறையாண்மை பேணி பாதுகாக்கப்படுகிறது' என அமைச்சர் ரகுபதி கூறுகிறாரே?

! இந்த வாரம் வட்ட மேஜையில் சென்னை, ஏ. சுப்பிரமணியன் எழுதியுள்ள கடிதத்தைப் படித்துப் பாருங்கள். இவரைப் போன்றவர்கள் உள்ளவரை (ஜெய)லலிதா சகஸ்ரநாமம் அமைச்சர்களால் ஓதப்படுவதில் வியப்பில்லை.

● இரா. சக்திவேல், பரமத்திவேலூர்.

? 'இன்னும் ஒன்றரை ஆண்டில் தமிழ் நாடு தன்னிறைவு பெற்று விடும்' என்று அமைச்சர் துரை ராமசாமி நம்பிக்கை தெரிவித்திருக்கிறாரே?

! சரியாப் போச்சு! இத்தனை கெடுபிடி வசூல் செய்தும் அவர்கள் தன்னிறைவு அடைய இன்னும் ஒன்றரை ஆண்டுகள் ஆகுமா? அரே, பாபுரே!

● என். ராஜலட்சுமி, மேலப்பாதி.

? மாஸ்டர்ஸ் கிரிக்கெட் விளையாட்டை ரசித்தீர்களா?

! ஓ யெஸ், 'தம்' போய் விட்டாலும் கலை நுணுக்கம் எங்கே போய்விடும்!

● டி. சந்திரன், ஈரோடு.

? பல்லக்கில் ஜெயலலிதாவும், பல்லக்கைத் தூக்கும் ஆட்களாக எஸ்.டி.எஸ்., செங்கோட்டையன், இந்திரகுமாரி, மதுசூதனன் ஆகியோருமாக ஒரு கனவு கண்டேன். எத்தனை நாட்களில் பலிக்கும்?

! ஏற்கெனவே பலித்து விட்டதே! இன்று நடப்பதைத்தான் உருவகமாகக் கனவில் கண்டிருக்கிறீர்கள்!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

# இல்லை என்கிறாரே வாழப்பாடி...?

? 'பொது மக்களுக்குத் தொல்லை தரும் சமூக விரோதிகளைச் சுட்டுக் கொல்லுங்கள்' என்று காவல் துறை விழா ஒன்றில் தேவாரம் பேசியிருக்கிறாரே?

! காவல் துறையில் பொறுப்பான பதவியில் உள்ள ஒருவரின் பொறுப்பற்ற பேச்சு.

● கே. ரமேஷ், பள்ளிபாளையம்.

? '1996 ஆம் ஆண்டில் ரஷ்ய தேர்தலை சேஷன் நடத்தினால் மகிழ்வேன்' என்று ரஷ்ய எதிர்க்கட்சித் தலைவர் கூறியுள்ளது பற்றி?

! அப்படி நடந்தால் அங்கே அவர் ஒருவர் மகிழ்வாராக இருக்கலாம்; அப்படி மூட்டை கட்டி சேஷன் அனுப்பப்பட்டால் இங்கே ஆயிரக்கணக்கான அரசியல்வாதிகள் மகிழ்வார்கள்!

● ஜெ. மனோஹர் இன்பராஜ், திருச்சி.

? இவ்வளவு திறம்படவும் சுவைபடவும் நகைச்சுவையுடனும் அறிவு பூர்வமாகவும் பதிலளிக்க எங்கு, யாரிடம் கற்றுக் கொண்டீர்?

! இவ்வளவு திறம்படவும் சுவைபடவும் நகைச்சுவையுடனும் அறிவு பூர்வமாகவும் 'ஐஸ்' வைக்க எங்கு, யாரிடம் கற்றுக் கொண்டீர்!

● வீ.பா. கிருஷ்ணன், மதுரை ❑

? தன்னைச் சிலுவையில் அறைந்தவர்களையே, 'பிதாவே தாங்கள் செய்வது இன்னதென்று அறியாமல் செய்கிறார்கள் இவர்களை மன்னியும்' என்ற ஏகநாதரை ஆண்டவராக ஏற்றுக் கொண்டவர்கள், ஜெயலலிதாவின் போஸ்டர் பிரச்னையைப் பெரிதாக்கி போராட்டம் நடத்துகிறார்களே?

! ஏகுவை ஆண்டவராக ஏற்றுக் கொண்டார்களே தவிர, (ஜெ. போன்று) தங்களையே கடவுளாக அவர்கள் எண்ணவில்லையே! மனிதர்களாக இருப்பதால்தான் அத்தகைய புனிதருக்குக் களங்கம் விளைவிக்கப்பட்டதாகக் கருதி, போராட்டம் நடத்துகிறார்கள். தவறுக்கு வருத்தம் தெரிவிக்கும் பண்பாடு கூட இல்லாதவருக்காக மன்னிப்பு வேண்டி பிரார்த்தனை செய்கிறார்கள்.

● எச். மோகன், மன்னார்குடி.

? ஆர்.எஸ்.எஸ். இயக்க அலுவலகக் கட்டடத்தை ஸ்ரீ ஜெயேந்திரர் திறந்து வைத்தது பற்றி உங்கள் கருத்து?

! எத்தனையோ இல்லங்களுக்கும்,

❑ ரூ. 25 பரிசு பெறுபவர்:
வீ.பா. கிருஷ்ணன்,
7, முதல் தெரு, முத்துராமலிங்கபுரம்,
மதுரை - 17.

நிறுவனங்களுக்கும் விஜயம் செய்து ஆசி வழங்குவது போல் இங்கேயும் செய்திருந்தால் பிரச்னையில்லை. ஆனால் அங்கே பேசும்போது தாம் முன்னாள் ஆர்.எஸ்.எஸ். உறுப்பினர் என்பதைத் தம்மால் மறக்க முடியவில்லை என்பதை அவர் உணர்த்தியது, புருவங்கள் உயரக் காரணமாகிறது!

● எஸ். குமார், காரைக்குடி.

? சுங்குவார்சத்திரம் அருகே நடந்த பயங்கர விபத்து குறித்து....?

! தாமதமின்றி நஷ்ட ஈடு தருவது, விபத்தில் மாண்டவர்களின் உறவினர்களுக்கு உடனடி உதவி என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்தப் பணம் இறந்தவர்களைத் திரும்பக் கொணராது; துயரையும் குறைக்காது. எனவே வழக்கமான நஷ்ட ஈடு, ஆறுதல் வார்த்தைகளுக்கு அதிகமாக ஜெ.ஆட்சி பலவும் செய்ய வேண்டும். எரி பொருள்களைக் கொண்டு செல்லும் லாரிகளுக்கு இன்ஸ்பெக்ஷனைக் கடுமையாக்குதல், பஸ்களில் எமெர்ஜென்ஸி கதவுகள் பின்புறம் பொருத்துதல், டிராக்டர்-லாரிகளில் ஆட்களை ஏற்றிச் செல்லும் ஆபத்தான பழக்கத்துக்கு முடிவு கட்டுதல், பஸ் ஓட்டுனர்களுக்கும் நடத்துனர்களுக்கும் மேலும் சிறப்பான பயிற்சி அளித்தல், பஸ்களின் பராமரிப்புத் தரத்தை இன்னும் உயர்த்துதல், ஓட்டுனர்கள் மது அருந்துகிறார்களா என்பதைப் பயணத்தின் தொடக்கத்திலேயே கண்டறிதல் முதலியன. கடைசியாக ஒன்று: எடுத்ததற்கெல்லாம் ஜெஜெ. பெயரைச் சூட்டுவதில் உள்ள அனர்த்தத்தை இப்போதாவது புரிந்து கொள்வார்களோ?



* நம்பிக்கை இழப்பு?



* ஆர்.எஸ்.எஸ். ஞாபகம்



* ரஷ்யாவுக்கு ஏற்றுமதி?

# பிரதமரின் தம்பி பார்த்த ஜோசியம்!




### கம்யூனிஸ்டுகளின் புதிய தத்துவம்

●● 'மதம் என்பது மனிதர்களை மயக்கும் அபின்' என்று காரல்மார்க்ஸ் எச்சரித்தார். மார்க்ஸை மூட்டை கட்டி வைத்து விட்டனர் கம்யூனிஸ்டுகள்! 'பொருள் முதல் வாதமா? கருத்து முதல் வாதமா?' என்கிற சர்ச்சைகளையெல்லாம் ஒதுக்கி விட்டு அருள் முதல் வாதத்திற்கு வந்து விட்டார்கள்! அண்மையில் நடந்த தங்கள் கட்சியின் மாநில மாநாடு சிறப்புற நடக்க வேண்டுமென்பதற்காகக் கேரள கம்யூனிஸ்டுகள் தோழர் கணபதியிடம் ரொம்பவும் வேண்டிக் கொண்டார்கள். தோழர் கணபதி கட்சித் தோழர் அல்ல; கொட்டாரக்கராவிலிருக்கும் சாட்சாத் அந்த மகாகணபதியேதான்! கம்யூனிஸ்டுகளின் மனமாற்றத்துக்கு இன்னொரு உதாரணம்: திருவனந்தபுரத்திலுள்ள ஆற்றுக்கால் பகவதி அம்மன் கோயில் பொங்கல் விழாவுக்காகக் கட்சியின் அதிகாரபூர்வ நாளேடான தேசாபிமானி வண்ணமயமாகச் சிறப்புமலர் வெளியிட்டது!

### எதிரிகள் ஒழிவது எப்போது...?

●● தோஷத்திற்கான பரிகாரத்திலும் தோஷம் வர முடியுமா? வந்திருக்கிறது - பிரதமருக்கு! விஷயம் இதுதான்: பிரதமரின் சார்பில் தம்பி மனோகரராவ் அண்மையில் கேரளாவுக்கு வந்தார். குருவாயூரிலிருக்கும் பிரபல ஜோதிடர் விஷ்ணு நம்பூதிரியிடம் சென்றார். அவர் சோழிகளை உருட்டி ஜோதிடம் பார்த்துவிட்டு, முக்கிய கோயில்களில் அர்ச்சனைகளும் சில பரிகாரங்களும் செய்யவேண்டும் என்று கூறினார். அதன்படி பல பூஜைகள் நடந்தன. அதில் ஒன்று, எதிரிகளை ஒழிப்பதற்கான சத்ருசம்ஹார பூஜை. அதில் பிரதமர் கலந்து கொள்ள முடியாததால் அவரைப் போன்றே ஒரு பொம்மை செய்து வைத்துப் பூஜை நடந்தது. எல்லாம் முடிந்த பிறகு மீண்டும் விஷ்ணு நம்பூதிரியிடம் போய் தோஷமெல்லாம் நீங்கி விட்டதா என்று ஜோசியம் கேட்க, அவர் தோஷப் பரிகாரம் செய்ததில் தோஷம் வந்து விட்டதாகக் கூறிவிட்டார்! அதாவது பிரதமரின் உருவம் போன்ற சிலையை வைத்துச் செய்த பூஜையை மனத்தை ஒருமுகப்படுத்தி செய்யவில்லையாம்! இதனால் விளைந்த தோஷத்தை நீக்க என்ன வழி? பிரதமரே நேரில் கலந்து கொண்டு அந்த சத்ரு சம்ஹார பூஜை செய்வதொன்றுதான் வழி என்று செய்தி போயிருக்கிறது!

### எங்கே எழுத்துச் சுதந்திரம்?

●● ரமேசன் நாயர் எழுதிய 'சதாபிஷேகம்' நாடகம் கேரள முதல்வர் கருணாகரன் குடும்பத்தைக் கிண்டல் செய்வது போல் இருப்பதாக எழுந்த சர்ச்சை அனைவருக்கும் தெரிந்த விஷயம். அதன் காரணமாக, திருவனந்தபுரம் வானொலியில் பணியாற்றும் ரமேசன் நாயரை அந்தமானுக்கு இட மாற்றல் செய்து விட்டார்கள்! ரமேசன் நாயர் மசியவில்லை. டிரிப்யூனலில் தமது இட மாற்றல் உத்தரவு குறித்து வழக்குத் தொடர்ந்துள்ளார். வானொலி நிலையத்திடம் விளக்கம் கேட்டு நோட்டீஸ் அனுப்பியுள்ளது டிரிப்யூனல். ஆக, எழுத்துச் சுதந்திரம் என்பது எங்கேயும் நசுக்கப்படும். அதன் வடிவங்கள்தான் வேறு வேறு!

திருவனந்தபுரத்திலிருந்து:
**எஸ். எஸ். மணி, ந. சுந்தர்.**

# மணிக்கொடி

ஜோதிர்லதா கிரிஜா

கங்கா, ராஜாராமனின் வீட்டுக்கு அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தான். 'அந்தப் பெண்' அவ்வீட்டில் தற்போது இல்லை என்பதால் விசாலம் அவனது போக்குவரத்துக்கு முகஞ்சுளிக்கவோ முணுமுணுக்கவோ இல்லை.

அந்த வீட்டில் யாருமே மகிழ்ச்சியாக இல்லை என்பதும், குறிப்பாக ராஜாராமன் எதையோ இழந்தவர் போன்று எப்போதும் ஏக்கத்துடன் காணப்பட்டார் என்பதும் கங்காவுக்குப் புதிராக இருந்தன.

ஒரு நாள் பேச்சுவாக்கில், "அப்பா, நான் கொஞ்ச நாள் சுதந்தரப் போராட்டத்துல ஈடுபட்டுட்டு அதுக்கு அப்புறமா ஒரு வேலை தேடிக்கிறதுல உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபனை இல்லியே?" என்று கங்கா கூச்சப்பட்டுக் கொண்டே ராமசாமியிடம் வினவிய போது அவர் சிரித்தார்.

"அதெல்லாம் முழுக்க முழுக்க உன்னோட சௌகரியம், கங்கா. நீ பத்திரமாத் திரும்பி வந்தது ஒரு சந்தோஷம். காந்தியவாதியானது ரெண்டாவது சந்தோஷம். இப்ப சத்தியா எங்களோட இருந்துண்டிருக்கிறது மூணாவது சந்தோஷம். போதாதா? இதுக்குமேல எதிர்பார்க்கிறது பேராசை!"

"நாமதான் காந்தியம் - காந்தியம்ங்கறோம். ஆனா போன வருஷம் காங்கிரஸ் மகாசபைத் தலைவரா சுபாஷ் சந்திர போஸைத் தேர்ந்தெடுத்தவா இந்த வருஷமும் அவரையே தேர்ந்தெடுத்துட்டாளே. காந்திக்கு அதுல இஷ்டமே இல்லியாமே?"

"ஆமா, சுபாஷோட ஆவேசம். சுதந்திரத்தை அடிச்சுப் பிடிச்சுத்தான் வாங்க முடியும்கிற எண்ணம் இதெல்லாம் அவருக்குப் பிடிக்காத விஷயம். அதான் ரெண்டாவது தடவையும் அவர் போட்டி போடப் போறதா அறிவிச்சதும், போட்டியே இல்லாம அபுல் கலாம் ஆஸாதைத் தேர்ந்தெடுக்கணும்கிற ஆசையைக் காந்தி வெளியிட்டார். சுபாஷ் விலகிக்கல்லே. ஆனா, ஆஸாத் கௌரவமா விலகிண்டுட்டார். அப்புறம் காந்தி தன்னோட சார்பில் பட்டாபி சீதாராமய்யாவைப் போட்டி போடவெச்சார். ஆனா பட்டாபி தோத்துட்டார். சுபாஷ் ஜெயிச்சுட்டார்! 'பட்டாபியின் தோல்வி என்னோட தோல்வி'ன்னு காந்தி பகிரங்கமா அறிக்கையே விட்டார்."

"பட்டாபியோட தோல்வியால காந்தி அப்படியே ஒடிஞ்சு போயிட்டாராமே?"

"ஆமா. காங்கிரஸ்காராளுக்கே ஏண்டாப்பா சுபாஷைத் தேர்ந்தெடுத்தோம்னு தோண ஆரம்பிச்சுடுத்து. உலகப்போர் ஆரம்பிக்க இருந்ததை சுபாஷ் பிரிட்டனுக்கு எதிராப் பயன்படுத்திக்கத் திட்டம் போட்டு வெளிப்படையாவே பேச ஆரம்பிச்சார். பிரிட்டனுடைய அணிக்கு எதிரா இருந்த இத்தாலி, ஜெர்மனி, ஜப்பான் இந்த நாடுகளுடைய ஆதரவைப் பெறணும்னு அவர் சொன்னது காந்திக்குப் பிடிக்கல்லே. எதிரியோட கஷ்டத்தை நாம ஆதாயப்படுத்திக்கக் கூடாதுங்கிற கொள்கை உள்ளவராச்சே. அதனால, எப்ப தனக்கு செல்வாக்குக் குறைஞ்சுடுத்தோ இனி காங்கிரஸோட நடவடிக்கைகள்ளேருந்து முழுக்க முழுக்க விலகிக்கறேன்னுட்டாரே. அதுல சுபாஷ்க்கே சம்மதமில்லியே. என்னதான் காந்தியோட ஆள் தோத்துட்டாலும், காந்தியோட பக்கபலம் இல்லாம தன்னால எதை



யும் சாதிக்க முடியாதுங்கிறது அவருக்கு நன்னாத் தெரியும்."

"கடைசிலே வேற வழி தெரியாம, சுபாஷ் சந்திரபோஸ் காங்கிரஸ்லேருந்து விலகி ஃபார்வேர்ட் ப்ளாக்னு புதுக் கட்சி ஆரம்பிச்சுருக்காரே, அது காங்கிரஸ் அளவுக்குப் பெரிசாகும்னு நீங்க நெனைக்கிறேளாப்பா?"

"எதுவும் சொல்ல முடியாது, கங்கா. எம். என். ராய் தெரியுமில்லியா உனக்கு?"

"கம்யூனிஸ்ட் ராயைத்தானேப்பா சொல்றேள்?"

"ஆமா. அவர் வேற 'ரேடிகல் டெமாக்ரடிக் பார்ட்டி'ன்னு ஒரு புதுக் கட்சியைக் காங்கிரஸ்லேருந்து சிலரைப் பிரிச்சு உண்டாக்கி இருக்கார். இதெல்லாம் எங்க கொண்டு போய் விடுமோ தெரியல்லே.

அப்போது, ஆமா? அவாத்துப் பொண்ணு பவித்ராவைப் பத்தி என்னமோ பேசிக்கிறாளே?"




என்றவாறு அங்கு வந்தாள் விசாலம்.

கங்கா கண்களை மலர்த்தி, "ஊர்ல என்ன பேசிக்கிறா பவித்ரவைப் பற்றி?" என்று கேட்டான்.

"இங்கே இல்லாத காங்கிரஸ் கட்சியா? வடக்கே போய்தான் சேவை செய்யணுமா? அந்தப் பொண்ணு யார் கூடவோ ஓடிப் போயிடுத்து; அதை மறைக்க காங்கிரஸ் சேவைன்னு கதை கட்டி விட்டிருக்கான்னு பேசிக்கிறா" என்றாள் விசாலம்.

## 59

கங்கா கோபத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு ராமசாமியின் பக்கம் பார்த்தான். அவரும் சொல்லிவைத்தாற் போல் அவனைப் பார்த்தார். அவன் வாயைத் திறப்பதற்கு முன்னால் அவர் முந்தினார்.

"இத பாருக்கா. பிறத்தியாரைப் பத்தி அவதூறு பேசறது ரொம்பத் தப்பு. அந்த அவதூறைக் கேக்கறது அதைவிடத் தப்பு. ஏன்னா, கேக்கறவா இருக்கிறதுனாலதானே பேசறா?"

ராமசாமியினுள் எதுவோ சிதறிக் கொண்டிருந்தது. நடந்து முடிந்து விட்ட கோரம் தெரியவரின் கங்கா எவ்வளவு அதிர்ந்து போவான் என்ற நினைப்பால் அவரது வயிற்றில் அமிலம் ஊறியது. 'அந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு நினைச்சிருக்கான். இவனைக் காட்டிலும் அது அதிகமாப் பிரியம் வெச்சிருந்திருக்குன்னுதான் அன்னிக்கு ராஜாராமய்யர் சொன்னதைக் கேட்டதும் நினைக்கத் தோணித்து. பாவம் அந்தப் பொண்ணு....' - ராமசாமியின் உள்ளம் மகனைவிட அந்தப் பெண்ணுக்காக அதிகம் உருகியது.

"ஊர்ல பேசிக்கிறதை நான் சொன்னேன். நானாவா இட்டுக் கட்டிப் பேசினேன்.? அதுக்கு எதுக்குடாப்பா உங்க ரெண்டு பேருக்கும் இப்படிப் பொத்துண்டு வருது? ரொம்ப நன்னாருக்கு."

விசாலம் வலத்தோளை உயர்த்தி அதில் முகவாயை இடித்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

கடந்த சில மாதங்களாகவே விசாலம் கங்காவின் கல்யாணப் பேச்சை அவன் இல்லாத போது ராமசாமியிடம் எடுத்திருந்தாள். பவித்ரா பற்றிய சேதி அறிந்தவராக இருந்ததால் அவனிடம் அது பற்றிப் பேசுவதில் அவருக்கு ஒரு தயக்கம் ஏற்பட்டிருந்தது. எனினும் தக்க நேரத்துக்குக் காத்துக் கொண்டிருந்தார்.

கொஞ்சங் கழித்து, "அவாத்து மனுஷான்னாலே இந்த அத்தைக்கு ஒரு இளக்காரந்தாம்ப்பா," என்றான் கங்கா. அவனது குரலில் ஒரு மனத்தாங்கலும் கசப்பும் விரவி நின்றன.

"ஒண்ணை நீ ஞாபகம் வெச்சுக்கணும், கங்கா. உங்க அத்தை படிக்காதவ. படிக்காத பொம்மனாட்டிகளுக்கு மனசு அவ்வளவுதான். புருஷாளுக்கே இந்த மாதிரி வம்பு பேசற வழக்கமெல்லாம் இருக்கு. எங்க காங்கிரஸ் கூட்டத்துல இருக்கிறவா கிட்டவே நான்தான் பார்க்கறேனே!"

அஞ்சனாவையும் தம்மையும் தொடர்பு படுத்திக் கிளம்பிய வம்புப் பேச்சு, மொட்டைக் கடிதம், குஞ்சம்மாவின் அழுகை எல்லாம் வரிசையாக அப்போது அவருக்கு ஞாபகம் வந்தன.

மேலும் சில விநாடிகள் மௌனமாய்க் கழிந்தன. தக்கநேரம் என்ற ஒன்று தானாக வருமென்று காத்துக் கொண்டிருப்பதற்குப் பதில் அதைத் தாமாக ஏற்படுத்திக் கொண்டால்தானென்ன என்ற எண்ணம் திடீரென்று அவருக்கு வந்தது.

"கங்கா, உங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்."

"என்னப்பா?" என்றான் பக்கவாட்டில் முகந்திருப்பி.

"உன் கல்யாண விஷயந்தான்."

"எங் கல்யாணத்துக்கு இப்ப என்னப்பா அவசரம்?"

"நான் கலியாணம் பண்ணிண்ட வயசோட ஒப்பிட்டா உனக்கு வயசாச்சு, கங்கா! கல்யாணம்னதும் எல்லாருமே...."

"ஒரு நிமிஷம்ப்பா. கல்யாணம்னதும் எல்லாருமே உடனே சொல்ற பதில்தான் அப்படின்னுதானே சொல்ல வந்தேன்? எனக்கு அந்தத் தயக்கமெல்லாம் கிடையாதுப்பா.




ஆச்சு. கூடிய சீக்கிரம் நம்ம நாட்டுக்குச் சுதந்திரம் கிடைச்சுடும்னுதான் தோணறது. பாரதமாதாவுடைய கைவிலங்கை முறிச்சுட்டு அதுக்கு அப்புறம் நான் கால் விலங்கு - அதாவது கால்கட்டுப் போட்டுக்கறேம்ப்பா. அது வரைக்கும் அந்தப் பேச்சே வேண்டாம். ப்ளீஸ். என்னைப் புரிஞ்சுக்குங்கோ."

ராமசாமி சன்னமாகப் பெருமூச்சுடன் அந்தப் பேச்சுக்கு ஒரு தற்காலிக முற்றுப் புள்ளி வைத்தார். இருவருடைய உரையாடலும் நின்றுவிட்டாலும் ஊஞ்சல் மட்டும் கிறீச்சிட்டுக் கொண்டிருந்தது.

சிறிது நேரம் சென்று, "கங்கா! ஜெயிலில் உனக்கு எந்தவிதமான கொடுமையும் நடக்கல்லேன்னு நீ சொன்னது பொய்தானே? என்னோட மன நிம்மதிக்காகத்தானே அப்படிச் சொன்னே?" என்று கேட்டார் ராமசாமி.

"அதைத் தெரிஞ்சுண்டு இப்ப என்னப்பா பண்ணப் போறேள்?"

"ஒரு கவலைதாண்டா. இங்க பெல்லாரி ஜெயிலில் என்ன அக்கிரமங்கள் பண்ணிருக்கா தெரியுமோ? பயங்கரம். அண்டர்வேரோட நிக்க வெச்சு அடிச்சிருக்கா. அப்படி நிக்க முடியாதுன்னவாளை ரெண்டு மடங்கு அடிச்சு நொறுக்கி இருக்கா. சிறைக் கதவைத் தாண்டிண்டு சின்ன ஓடை மாதிரி ரத்தம் வெளியில ஓடியிருக்குன்னா பாத்துக்

கயேன்!"

"அந்த அளவுக்கு அலிப்பூர் ஜெயிலில் எங்க பேட்ச்சுக்கு எதுவும் நடக்கல்லேப்பா. ஆனாலும் கொடூரமாத்தான் நடத்தினா. அதையெல்லாம் எதுக்குப்பா இந்த நல்ல வேளையில நினைக்கணும்? விடுங்கோ."

ராமசாமி பேசாதிருந்தார்.

"காந்தியைப் பத்திச் சொல்லுங்கோ, அப்பா! எப்பேர்ப்பட்ட மனுஷன்! அவர் சிரிப்பிலே ஒரு தெய்விகம். ஒரு தாய்க்குரிய அரவணைப்பு, அதே சமயம் தந்தைக்குரிய கண்டிப்பு.... நமக்குச் சுதந்திரம் கிடைச்ச பிறகும் நமக்கு வழிகாட்ட அவர் நீண்ட காலம் இருக்கணும்...."

"காந்தி மட்டுமில்லாம, வேற சில மகான்களாலேயும் சில அற்புதங்கள் இங்க கொஞ்ச காலமாவே நடந்துருக்குடா. ராஜா ராம் மோகன்ராய், வீரேசலிங்கம் பந்துலு, ஜஸ்டிஸ் ரானடே தம்பதிகள், லூயி விவியன் டெரோஸியோ, நாராயண குருப், ராமலிங்க அடிகள், ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர், பக்ருத்தீன் தியாப்ஜி, மீர்ஸா குலாம் அகமத், சுவாமி தயானந்தர், சுவாமி சிரத்தானந்தர் இப்படி அடுக்கிண்டே போகலாம். இதெல்லாம் மட்டுமில்லாம, சீக்கியர்கள் பார்சிகள் இவாள்ளயும் மதச் சீர்திருத்த இயக்கம் ஏற்பட்டுது. நீ கவனிச்சா ஒண்ணு தெரியும். போன நூற்றாண்டுலேருந்தே இந்தியாவைப் பல வழிகள்ளயும் தூக்கி நிறுத்தறதுக்கான முயற்சிகளைப் பல பெரியவா செஞ்சுண்டு வந்திருக்கா. நாடு முழுக்க, கிட்டத்தட்ட எல்லா ராஜதானிகள்ளேயும் இது மாதிரி சமூக சீர்திருத்தவாதிகள் தோணி இருக்கான்னா அது எப்பேர்ப்பட்ட ஆச்சரியம்? எவ்வளவு பெருமையான விஷயம் நம்ம இந்தியாவுக்கு?"

கங்கா சிரித்தாள். "இதுல பெருமைப் படறதுக்கு என்னப்பா இருக்கு? நம்ம சீரழிவைத்தான் இவாளோட பிறப்பும் உழைப்பும் காட்டறதுன்னு நான் நினைக்கிறேன். அடியோட சாஞ்சு விழுந்து கிடந்த இந்தியாவைச் சமூக ரீதியிலயும், மத ரீதியிலயும் தூக்கி நிறுத்த இத்தனை பெரியமனுஷா இங்க பிறந்து தொண்டு செஞ்சாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருந்திருக்குன்னுதான் அதுக்கு அர்த்தம். அரசியல் ரீதியில் தூக்கி நிறுத்த காந்தி வந்திருக்கார். நீங்க சொல்றாப்ல அவர் சமூக ரீதியிலயும் இந்தியாவுக்குத் தொண்டு செஞ்சிண்டிருக்கார். மனுஷா மோசமான நிலையில இருக்கிற நாடுகள்ளதான் மகான்கள் பிறக்கிறா!"

கங்காவின் வாதங்களில் இருந்த நியாயம் அவரை வாயடைக்கச் செய்தது.

"ராஜா ராம்மோகன் ராயோட அண்ணா பொண்டாட்டியை - அவளுக்கு இருபது வயசுக்குள்ளதான் இருக்குமாம் - அவரோட அண்ணா செத்ததும் அவரோட சேத்துக் கொளுத்தறதுக்காக அவளைப் பலவந்தமாப் பாடையில வெச்சிருக்கா. தீ மூட்டினதும் சூடு பொறுக்கமாட்டாம அந்தப் பொண்ணு அலறிண்டு எழுந்துருக்கு. அவளை மறுபடியும் அழுத்தி எரிச்சுட்டாளாம். மன்னி மேல ராஜா ராம்மோகன் ராய்க்கு ரொம்பப் பிரியம். ஆனா சின்னப் பையனான அவரால் எதுவுமே பண்ண முடியலே. சதியை ஒழிக்கணும்கிறது அன்னிக்கு அவர் மனசில விழுந்த தீர்மானமாம். இது உங்களுக்குத் தெரிஞ்சிருக்கலாம். ஆனா இன்னொரு விஷயம் உங்களுக்குத் தெரிஞ்சிருக்காதுன்னு நினைக்கிறேன். பெங்கால்ல கொஞ்சநாள் இருந்ததுனால தெரிய வந்த விஷயம்."

"என்ன?"

"ஒரு பொண்ணை அவ புருஷனோட சேர்த்து இப்படி எரிச்சதும், அவளுக்குச் சொந்தமான நகைகள்ளாம் யாருக்குச் சொந்தம்னு ஒரு கேள்வி கிளம்பித்தாம். எனக்கு, உனக்குன்னு எல்லாரும் சண்டை போட்டுப் பாளோல்லியோ? புரோகிதர்கள் அதுக்குச் சாமர்த்தியமா ஒரு வழி கண்டுபிடிச்சா. என்னன்னு ஊகிக்க முடியறதா பாருங்கோ."

சில விநாடிகள் யோசித்தபின், "தெரி





"உங்க வீட்டுக்கு வந்த திருடன் அறிவுஜீவியா? எப்படி சொல்றீங்க?"

"டி.வி. பெட்டியை மட்டும் வச்சிட்டு மத்த எல்லாத்தையும் அடிச்சுட்டு போயிட்டானே!"

— கவீட் ரவி



"காதுக்குள்ள பல்லி போயிடுச்சு டாக்டர்!"

"பல்லி போற அளவு என்ன பண்ணி னீங்க?"

"அடுத்த அறைல மருமக பேசிட் டிருந்ததை சுவரையொட்டி காதை வச்சி ஒட்டுக் கேட்டேன்!"

— அம்பை தேவா

வேண்டாம். மனதார நேசிக்கிறேன் என்று ஒரு வார்த்தை மட்டும் சொல்லு."

"ப்ளீஸ். புரிந்து கொள் கங்கா. என் தொழிலில் எந்நேரமும் சாவின் விளிம்பில் நான்... என் வாழ்வுக்கு உத்தரவாதமில்லை பெண்ணே!"

"மனத்துக்குப் பிடித்தவனுடன் சில நாட்கள் வாழ்ந்தாலும் போதும்!"

அவன் மோவாயைப் பற்றி, முகத்தை நிமிர்த்தினாள்.

"உண்மையில் நீ என்னை நேசிக்க வில்லையா? என் கண்களை நேராகப் பார்த் துச் சொல். ம்ம். கம் அவுட் சூர்யா."

இருவர் கண்களும் கலந்தன; காதலில் இறங்கின. சூர்யா பெருமூச்சுடன் தலை குனிந்தான்.

"ஹுர்ர்ரே!" என்று குழந்தை போல் குதித்தாள் கங்கா.

மாலை மயிலை லஸ்ஸில் ஷாப்பிங் செய்தார்கள். சூர்யா கரத்தை விடாமல் பற்றியிருந்தாள் கங்கா. ஒரு கடையிலிருந்து வெளிப்பட்டதும் சூர்யாவின் சிரிப்பு உறைந்தது—

சில அடிகள் தொலைவில் வாயில் சிகரட் புகைய எங்கோ பார்த்தபடி அந்த ரேப் வில்லன்! அதே வட்டக் கழுத்து பனியன்; குறுந்தாடி. லஸ்தான் அவன் இருப் பிடமா....?

சூர்யாவின் தாடை இறுகியது. அயோக் கியனைச் சுட்டுவிடத் துடித்தான்.

அந்த மிருகத்தைக் கங்காவும் கவனிப் பதை சூர்யா பார்த்தான். அன்று இரவு நிகழ்ந்தது நினைவில் இல்லாதவளாக அவள் முகம் அசுவாரசியமாக, சலனமின்றிக் கிடந்தது.

எதேச்சையாகத் திரும்பிய தடியன் அவர்களைக் கவனித்து விட்டான். மெல்ல நழுவத் துவங்கினான்.

"இங்கேயே இரு கங்கா. இதோ வந்துடறேன்."

"என்ன பிரச்னை சூர்யா?" அவன் முகத் தைப் பார்த்துக் கவலையுடன் கேட்டாள்.

சூர்யா பதில் சொல்லாமல் வேகமாகக் கிளம்பினான். அவன் சாலையைச் சடுதியில் கடந்து ஓடத் துவங்கினான்.

சூர்யாவால் சில வினாடிகளுக்கு மேல் துரத்த முடியவில்லை. ஏக நெரிசல். அவன் ஓர் ஆட்டோ பிடித்துப் போயே போய் விட -

சூர்யா சோர்வுடன் கங்காவிடம் திரும்பி னான்.

"யார் அவன்? ஏன் அவனைத் துரத்தி னாய்?"

"அவன் ஒரு பிக்பாக்கட் திருடன்! என் பர்சை ஒருமுறை இழந்திருக்கிறேன்!" என்று சமாளித்தான்.

**டிசம்பர் 30, 1994**

இரவு 10:30. அந்த வீட்டில் கங்கா கொட்டக் கொட்ட விழித்தபடி அமர்ந்திருந் தாள். காலையில் சென்ற சூர்யாவை இன்ன மும் காணோம். அச்சுறுத்தும் தனிமை. தெரு வில் சத்தடி சுத்தமாக அடங்கிவிட்டிருந்தது. சுவர்க்கோழியின் ரொய்ங்ங். எங்கோ ஒரு நாயின் ஊளை. பல்லி ஒன்று கௌளி அடித் தது. பெருத்து ஒலித்தது. காற்றில் குளிர் கூடி யிருந்தது. கங்கா கைகளைத் தேய்த்து விட் டுக் கொண்டாள்.

திடீரென்று கதவு படபடவென்று தட்டப்படும் ஓசை கேட்டது. ஆவலுடன் ஓடிச் சென்று திறந்தவள், 'வீல்' என்று அலறி னாள்!

(தொடரும்)

**செ**ய்தியில் அடிபட்டு எல்லார் கவனத்தையும் ஈர்த்து வரும் உடல் உறுப்பு சிறுநீரகம். கிட்னி அல்லது சிறுநீரகத்தின் வேலை என்ன?

துப்புரவு தொழிலாளியின் வேலைதான்! அதாவது ரத்தத்தைத் - தூய்மைப்படுத்துவது. இவை நன்றாக இயங்கினால்தான ரத்தத்திலுள்ள நச்சுப் பொருட்கள் (urea - போன்றவை) வெளியேற்றப்பட்டு நாம் ஆரோக்கியமாக வாழ முடியும். மனிதன் ஆரோக்கியமாக வாழ ஒரு சிறுநீரகமே போதுமானதாகும்.

# கிட்னி கவனித்தால் கேடு வராது!



• கிட்னி எக்ஸ்ரே

ஆனால் இயற்கை, ஸ்டெப்னியாக மேலும் ஒன்றை நமக்குத் தந்திருக்கிறது. இவை வலதும், இடதுமாக முதுகுத் தண்டிற்கும் குடலுக்கும் இடையில் உள்ளன.

நன்றாக இயங்க வேண்டிய கிட்னி ஏன் சிலருக்குப் பழுதடைகிறது? சிறுநீரகத் தொய்வு (chronic-renal failure) என்பது, நீரிழிவு நோயாளிகள், அதிக ரத்தக் கொதிப்பு உள்ள நோயாளிகள் மற்றும் சிறு பிராயத்தில் ஏற்படும் ஒருவகை கிட்னி நோயால் (Glomerulonephritis) பாதிக்கப்பட்டோருக்கு அதிகமாக ஏற்படுகிறது. சிறிது சிறிதாகப் பழுதடைய ஆரம்பித்து, சரியான சிகிச்சை மேற்கொள்ளாத போது முற்றிலும் பழுதடைந்து விடுகிறது. End stage - renal failure என்று இதைச் சொல்வோம்.

நம் நாட்டில் ஒவ்வொரு வருடமும் 80,000 பேருக்குச் சிறுநீரகங்கள் - முற்றிலும் பழுதடைந்து விடுகிறது. இதில் தமிழ்நாட்டில் மட்டும் 5,000 பேர் ஒவ்வொரு வருடமும் புதிதாக பாதிக்கப்படுகின்றனர்! இதில் 65% பேர் 20 வயது முதல் 40 வயதிற்குள் அடங்குவர் என்பது சோகமான அம்சம்.

**ச**ரி, ஒருவருக்கு கிட்னி - சரியாக வேலை செய்யவில்லை என்பதை எப்படித் தெரிந்து கொள்வது? அதற்குச் சில அறிகுறிகள் உள்ளன.

- குறைவாகச் சிறுநீர் கழித்தல்
- முகம், கால் வீக்கம்
- ரத்த சோகை
- குமட்டல், வாந்தி
- அதிக ரத்தக் கொதிப்பு

போன்றவை ஏற்படலாம். இந் நிலையில் சிகிச்சை மேற்கொள்ளாவிட்டால், உடலில் சேரும் அதிக நச்சுப் பொருட்களால் உயிருக்கு ஆபத்தாகி விடும்.

டாக்டர் பி. கிரி

# பாதுகாப்பது எப்படி...?



இயற்கையின் ஓரவஞ்சனையைப் பாருங்கள்! ஆண்கள் கிட்னியை விட பெண்கள் கிட்னி எடை குறைவாய் அமைந்துள்ளது. (ஆண்கள் கிட்னி 125-170 கிராம்; பெண்களுடையது 115-155 கிராம் என அமையுமாம்). எடை கூடக் குறைய இருந்தாலும் நோய் பாதிப்பு வாய்ப்புகளில் வித்தியாசம் கிடையாது. ஆண்களுக்கும் சரி, பெண்களுக்கும் சரி, சிறுநீரகக் கோளாறுகளின் ஆரம்ப அறிகுறிகள் வெளிப்படையாகத் தெரியாது. அந்த உறுப்பு என்பது சதவிகிதம் பழுதடைந்த நிலையில்தான் பெரும்பாலானவர்கள் விழித்துக் கொள்கிறார்கள்.

இதய, கல்லீரல் நோய்களுக்கு, உணவுப் பழக்கமும், மது, சிகரெட் பழக்கங்களும் காரணமாவது போல் கிட்னி நோய்க்கு இன்னதுதான் காரணம் என்று குறிப்பாகச் சுட்டிக்காட்ட முடியாது.

அதனால் அதைப் பாதுகாப்பதற்கான வழிமுறைகளையும் பட்டியலிட்டுத் தர முடியாது.

எனினும் பொதுவான சில எச்சரிக்கைகளைக் கூறலாம்:

உயர் இரத்த அழுத்தம் மற்றும் சர்க்கரை வியாதி உள்ளோருக்கு, அவ்வியாதிகள் முற்றிய நிலையில் கிட்னி பாதிக்கப்படும் வாய்ப்பு அதிகம். எனவே இவர்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். ஆறு மாதத்துக்கொருமுறை சிறுநீர் பரிசோதனை செய்து கொண்டு கிட்னி சரியாக உள்ளதா என உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

வியர்வை மூலமும் சிறுநீர் மூலமும் உடலின்

சிறுநீரகங்கள் பழுதடைந்தால் அவற்றை மருந்து மாத்திரையால் சரிப்படுத்த முடியாதா? நோயின் ஆரம்பக் கட்டத்திலேயே மருத்துவரை அணுகினால் சில மருந்துகளினால் நோய் முற்றுவதைத் தடுக்கலாம். ஆனால் நோய் முற்றிய நிலையில் செய்யக் கூடியது இரண்டுதான்.

ஒன்று "டயாலிஸிஸ்" சிகிச்சை. இது Dialysis-machine மூலம் ரத்தம் சுத்தப்படுத்தப்பட்டு, மீண்டும் நோயாளியின் உடம்பில் ஏற்றும் முறை. இது நிரந்தர சிகிச்சை அல்ல. வாரத்திற்கு மூன்று முறையேனும் செய்து கொள்ள வேண்டும். இதற்கு ஆகும் பணச் செலவும் அதிகம். மாதம் ஒன்றுக்கு, கிட்டத்தட்ட 8000 – 10,000 ரூபாய் ஆகும். இது பெரிய நகரங்களில் - நவீன மருத்துவமனையில் மட்டுமே உள்ளது.

இரண்டாவது சிகிச்சை முறை : "மாற்றுச் சிறுநீரகம்" பொருத்துவது. இது நிரந்தர சிகிச்சை முறை. மனிதன் ஆரோக்கியமாக வாழ ஒரு கிட்னியே போதுமாகையால், பிறரிடமிருந்து ஒரு சிறு நீரகம் தானமாகப் பெற்று, நோயாளியின் உடம்பில் பொருத்தும் முறை. இச்சிறுநீரகங்களை யார் வேண்டுமானாலும் கொடுக்கலாமா? என்ற கேள்வி எழலாம்.

தானம் கொடுப்பவர்களை (donors) மூன்று வகையாகப் பிரிக்கலாம். ஒன்று - ரத்த சம்பந்தம் உள்ள ஒருவரிடம் (related donor) பெறுவது. அதாவது, நோயாளியின் தாய், தந்தை, சகோதரர், சகோதரி, மகன் அல்லது மகள் மற்றும் நெருங்கிய உறவினரிடமிருந்து பெறும் முறை. இவ்வகையில் பொருந்தும் சிறுநீரகங்கள் பொதுவாக நன்றாக நோயாளி உடம்பில் வேலை செய்கின்றன.

இரண்டு - ரத்த சம்பந்தம் இல்லாத ஒருவர் (un-related donor) கொடுப்பது. இவை அநேகமாக பணத்திற்காக அளிக்கப்படும் சிறுநீரகங்கள்.

மூன்றாவது - மூளை இறந்த நபரிடமிருந்து (brain death person) எடுக்கப்படும் முறை. Cadaver transplant என்றும் இதைச்



நச்சுப் பொருள்கள் வெளியேறுவதால் தினமும் இரண்டரை லிட்டர் தண்ணீராவது குடித்து வர வேண்டும். இது கிட்னியை அதிகமாக சிரமப் படுத்தாமல் நஞ்சை வெளியேற்ற உதவும். அதிகமாய் வியர்க்கும் உடல்வாகு உள்ளோர், உலைக் களம் போன்ற அதிக சூடான இடங்களில் வேலை செய்பவர்கள் கூடுதலாக அரை லிட்டர் நீர் அருந்த வேண்டும்.

உணவுக் கட்டுப்பாடுகளை சாதாரண நிலையில் உள்ளவர்களுக்கு விதிக்க வேண்டியதில்லை. தக்காளி, குளிர் பானங்கள், வைட்டமின் 'சி' அதிகமுள்ள பொருள்கள் இவற்றை விலக்கும்படி நாங்கள் சிபாரிசு செய்வது, ஏற்கெனவே சிறுநீரகக் கல் உபாதையினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு மட்டுமே.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் கிட்னி பாதிக்கப்பட்டு மரணத்தில் கொண்டு விடக்கூடிய இரண்டு காரணங்கள் சகஜமாக உள்ளன.

முதலாவது dehydration என்று சொல்லப்படும் உடலின் நீர் முற்றிலுமாக வற்றிப் போகும் நிலை. கடுமையான வெயிலில் உழைப்பவர்களுக்கு இது நேரக்கூடும். தொடர்ந்து வாந்தியும் வயிற்றுப்போக்கும் இருப்பதால் இந்த நிலை உண்டாகி கிட்னி பாதிக்கப்பட்டு இறப்பவர்களும் உண்டு. இந்த நிலைக்கு அறியாமையே காரணம். வாந்தி, வயிற்றுப்போக்கு தொடர்ச்சியாய் உள்ள போது, உப்பு - சர்க்கரை கலந்த சுத்தமான நீர்க்கரைசலைப் புகட்டினாலே போதும். ஆனால் இது பலருக்குத் தெரியவில்லை.

மற்றது மழைக்காலத்தில் தொற்றிக் கொள்ளும் லெப்டோஸ்பிரோஸிஸ் நோய். மழை நீர் சேற்றுக் குட்டைகளில் தேங்கியிருக்கும் போது அதில் வெறுங்காலுடன் நடப்பதைத் தவிர்க்க வேண்டும். லெப்டோஸ்பிரோஸிஸ் கிருமிகளின் உறைவிடமே இந்தக் குட்டைகள்தான். இந்நோயினால் பாதிக்கப்படுவோருள் ஐம்பது சதவிகிதத்தினர் இறந்து போகிறார்கள்!

வெயிலானாலும் பிரச்னை, மழையானாலும் பிரச்னை என்று அலுத்துக் கொள்ள வேண்டாம். விஷயமறிந்து வருமுன் காக்க முடியுமானால் பிரச்னை இல்லையே!

- டாக்டர் எஸ். ஸ்ரீதர்

தொகுப்பு : நிர்மலா சக்ரவர்த்தி

சொல்வார்கள். அதாவது பெரும் விபத்துக்கள் போன்றவற்றால் பாதிக்கப்பட்டு, உடல் இயக்கம் முற்றிலும் நின்றுவிட்ட ஒருவரின் உடம்பிலிருந்து, இறந்த சில மணிக்குள் எடுத்துப் பொருத்தும் முறை. இம்முறை வெளிநாடுகளில் மட்டுமே உள்ளது. இந்தியாவில் இன்னும் முறைப்படுத்தப்படவில்லை.

ரத்த சம்பந்தம் உள்ளவர் ஆனாலும் சரி, ரத்த சம்பந்தம் அற்றவர் ஆக இருந்தாலும் சரி, அவர்களுடைய கிட்னி, நோயாளியின் உடம்போடு ஒத்துப் போக வேண்டும். இல்லையேல் அது 'reject' ஆகி விடும். தானம் அளிப்போருக்குச் சில விதிமுறைகள் உள்ளன.

- வயது 20 - 60க்குள் இருக்க வேண்டும்.
- அவர்களுக்கு ரத்த அழுத்தமோ, சர்க்கரை வியாதியோ, மற்றும் மஞ்சள் காமாலை (Hepatitis-B), எய்ட்ஸ் போன்ற நோய்களோ இருத்தல் கூடாது.
- தானம் அளிப்போரின் சிறுநீரகங்கள், இருதயம், கல்லீரல் ஆகியன சரியாக இயங்கும் நிலையில் இருக்க வேண்டும்.
- மனநோய் உள்ளவர்களாகவும் இருத்தல் கூடாது.
- தானமளிப்பவரும் பெறுபவரும் ஒரே ரத்த குரூப்பைச் (group) சேர்ந்தவராக இருக்க வேண்டும்.
- இதைத் தவிர Chest x-ray, E.C.G., Ultra-sound (scan) I.V.P., Preliminary Cross-Match போன்ற பரிசோதனைகள் செய்யப்பட வேண்டும்.
- மேற்கூறிய யாவும் "நார்மல்" ஆக இருக்குமாயின், Renal angiogram எனப்படும் கிட்னி-ரத்த நாளங்களைக் கோடிட்டு காட்டும் x-ray test செய்ய வேண்டும். இதனால் தானம் கொடுப்பவரின் சிறுநீரக ரத்த நாளங்கள் சரியாக இருப்பதை உறுதி செய்கிறோம்.
- இறுதியாக, தானமளிப்பவர் பெறுபவர் ஆகிய இருவரின் செல்களும் ஒத்துப் போகிறதா என்று பரிசோதிக்கும் முறை - Final-cross match- இது மாற்று அறுவை சிகிச்சைக்கு 24 மணி நேரம் முன்பு செய்யப்பட்டு, donorஐ உறுதிப்படுத்துகிறது.

எல்லாம் சரியாக இருப்பின், தானம் செய்பவரிடமிருந்து ஒரு கிட்னி அறுவை சிகிச்சை முறையில் அகற்றப்பட்டு, ஒரு மணி நேரத்திற்குள் நோயாளிக்குப் பொருத்தப்படுகிறது. Perfusion - storage முறையில், கிட்னியை எடுத்தவுடன் அதிக பட்சமாக 3 நாட்கள் வரை பதப்படுத்தலாம். இந்த நவீன முறை இந்தியாவில் இல்லை. எனவேதான் கிட்னி எடுக்கப்பட்டு, ஒரு மணி நேரத்திற்குள் நோயாளிக்குப் பொருத்தப்படுகிறது.

ஆகவே, "donor-selection" என்பது

## அடுத்த இதழில்...

## 'பம்பாய்':

## - ஒரு புதிய கதாநாயகன்.



**கிராமச் சுவை**

# சிறிய சிருங்கேரி தெரியுமா?

பொதிகைமலைச் சாரலில் அமைந்துள்ளது புளியரை. இங்குள்ள சதாசிவமூர்த்தி கோயில் தனிச் சிறப்பு வாய்ந்த கோயில். லிங்க வடிவில் சுவாமி. சிவகாமி அம்பாள் சுவாமிக்குத் தென்புறம். சுவாமிக்கு எதிரே தட்சிணாமூர்த்தி பிம்பமாகக் காட்சியளிக்கிறார். அவர் அருகே சுவாமியை நோக்கி நந்தி. சதாசிவமூர்த்தி, தட்சிணாமூர்த்தி, நந்தி பகவான் ஆகியோரை ஒரே இடத்தில் நின்று வழிபடும் வசதி, இக்கோயில் தவிர தமிழகத்தில் வேறு எங்கும் இல்லை. சாதாரணமாக தட்சிணா மூர்த்தி, பிராகாரச் சுவரில்தான் வடிக்கப்பட்டிருப் பார். இங்கே தனி பிம்பமாக - சுற்றி வலம் வந்து கும்பிட வசதியாக அமைந்திருக்கிறது. தட்சிணா மூர்த்தி (குரு) வியாழனாக இருப்பதால் வியாழன் தோறும் பக்தர் கூட்டம். இங்கு விஜயம் செய்த சிருங்கேரிப் பெரியவர் இக் கோயிலைச் 'சிறிய சிருங்கேரி' என்று குறிப்பிட்டார்கள்.

சென்னை - 30, புளியரை கணேசன்





சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சையில் மிக மிக முக்கியமான ஓர் அங்கம். நினைத்த மாத்திரத்தில் யார் வேண்டுமானாலும் கிட்னி கொடுக்க முடியாது. அது நோயாளியின் உடம்பில் ஒத்துப்போகும்படி இருத்தல் முக்கியம்.

அதே போல் வேறு அறுவை சிகிச்சைகள் செய்யும் போது - உதாரணமாக வயிற்றில் அறுவை சிகிச்சை அல்லது சிஸேரியன் (caesarian) செய்யும் போது கிட்னியை எடுப்பது என்பது சாத்தியமற்றது. கிட்னியை ஒருவரிடமிருந்து அகற்ற வேண்டும் என்றால் முதுகுப்புறத்தில் அறுவை செய்துதான் அகற்ற முடியும்.

தானம் அளித்தவர், ஆஸ்பத்திரியில் 8-10 நாள் தங்கியிருக்க வேண்டும். பின்பு எல்லோரையும் போல் தினசரி வேலைகள் செய்யலாம். குழந்தைகள் பெற்றுக் கொள்ள முடியும். இந்த அறுவைச் சிகிச்சைக்குப் பின் உடல் இளைத்து, தொய்ந்து போகும் என்பதில் உண்மையில்லை.

தானம் பெற்றவர் மூன்று மாத ஓய்விற்குப் பின் இயல்பான வாழ்க்கை நடத்தலாம். அவர்கள் சில மருந்துகளைத் தவறாமல் ஆயுள் முழுவதும் எடுத்துக் கொள்ள வேண்டும். இம் மருந்துகள் எல்லா மருத்துவக் கல்லூரி மருத்துவமனைகளிலும் இலவசமாக அளிக்கப்படுகிறது.

இப்பொழுது இந்திய அரசாங்கம் un-related-organ transplant முறையைத் தடை செய்ய முனைந்துள்ளது. அதற்கு முன் சில விஷயங்களை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பழுதடைந்த சிறுநீரகங்களுடன் வாழ்க்கையில் போராடும் நோயாளிகள் எல்லோருக்குமே உறவிலேயே கிட்னி - தானமாகக் கிடைப்பது சாத்தியம்தானா? இன்று குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரத்தால் பல குடும்பங்களில் ஒரு குழந்தை அல்லது இரு குழந்தைகளே உள்ளன. பாதிக்கப்பட்ட ஒரு நபருக்குக் குடும்பத்திலிருந்து தானம் பெற முடியாத போது இந் நோயாளிகளின் கதி தான் என்ன?

"டயாலிஸிஸ்" முறையில் பணச் செலவு அதிகமாவதால் மாற்றுச் சிறுநீரக முறைதான் சிறந்த முறை. இப் பிரச்னைகளுக்குச் சிறந்த தீர்வு Cadaver transplant முறையை அரசாங்கம் துரிதப்படுத்தி, அம்முறை அமுலுக்கு வர எல்லா உதவிகளையும் அளிப்பதுதான். சட்டங்கள் இயற்றும்முன் இப் பிரச்னைகளை அரசாங்கம் சிந்தித்துப் பார்க்கும் என்று நம்புவோம்.

*Every man is a volume*
*If you know how to read him.*
*— Channing —*

# நினைவலைகள்

அன்று!

நான் பம்பாயில் இருந்தேன். எனது 'வறுமையின் நிறம் சிவப்பு' படத்தின் இந்தி வடிவம் சம்பந்தப்பட்ட அலுவல்களைக் கவனித்துவிட்டு இந்தி கவிஞர் குல்ஸார் அவர்களையும் இசையமைப்பாளர்கள் லட்சுமிகாந்த் - பியாரிலால் அவர்களையும் சந்தித்து விட்டு இரவு ஒரு மணி சுமாருக்கு நான் தங்கியிருந்த Holiday-Inn ஹோட்டலுக்கு வந்து சேர்ந்தேன். எனது வீட்டிலிருந்து இரண்டு மூன்று முறை என்னுடன் தொலைபேசியில் தொடர்பு கொள்ள முயற்சி செய்திருக்கிறார்கள் என்ற விஷயத்தை எனது அறைக்குள் கிடந்த ஒரு message மூலம் தெரிந்து கொண்டேன். அன்று இரவே எனது வீட்டாருடன் நான் தொடர்பு கொள்ள எடுத்த முயற்சிகள் அனைத்தும், தொலைபேசி லைன்கள் சரிவர இயங்காத காரணத்தினால், பயனற்றுப் போயின.

விடியற்காலை மணி ஐந்திருக்கும். டெலிபோன் மணி அடித்தது. வீட்டிலிருந்து எனது மனைவிதான் பேசினாள். 'நவரசத்திலகம்' என்கிற பட்டம் பெற்ற நடிகர் முத்துராமன் அவர்கள் முதல் நாள் காலையில் ஊட்டியில் திடீரென்று மாரடைப்பு காரணமாகக் காலமாகிவிட்ட சோகச் செய்தியை எனக்குத் தெரிவித்தாள். எத்தனை நேரம் நான் அதிர்ச்சியுற்றுப் போயிருந்தேன் என்பதை விவரிக்க இயலாது.

உடல் நலத்தை அதிகம் பேணிக் காப்பவர் முத்துராமன். எந்த விதமான கெட்ட பழக்கங்களும் அவருக்குக் கிடையாது. Teetotaller என்கிற வார்த்தைக்கே இலக்கணம் வகுத்து நின்ற அந்தக் கலைஞன், பண்புக்கு உறைவிடமாகத் திகழ்ந்த அந்தத் திலகம், இன்சொற்களைத் தவிர எதையுமே பேசத் தெரியாத - பேசி அறியாத அந்த உயர்ந்த பண்பாளன், எந்நேரத்திலும் புன்னகை தவழும் முகத்துடன் காணப்படும் அந்த நிஜக்கலைஞனை சாவு எப்படி அணைத்துக் கொண்டது? ஓரிரு படங்களிலே நடித்தவுடனேயே ஆகாசத்துக்கும் பூமிக்கும் குதிக்கின்ற பெரியவர்கள் இருக்கின்ற இந்தக் கலைத் துறையில் முத்துராமன் மட்டும் எப்படி அவ்வளவு balanced ஆக இயங்கிக் கொண்டிருந்தார் என்பது ஆச்சர்யத்திலும் ஆச்சர்யமான விஷயம்தான்.

முத்துராமன் சேவாஸ்டேஜ் நாடகங்களிலே நடித்து வந்த கால கட்டத்திலேயே அவரையும் அவருடைய நடிப்பையும் நான் மிகவும் ரசித்தவன். நானும் அவரும் திரைப்படங்களிலே சேர்ந்து செயல்படுகின்ற பல சந்தர்ப்பங்கள் எனக்குக் கிடைத்தன.

முதன் முதலாக நான் அவருடன் பணி புரிந்தது 'நாணல்' திரைப்படத்தில்.







கே. பாலசந்தர்

'புன்னகை' படம்தான் எங்கள் கடைசி படம். எனது ஒவ்வொரு படத்திலும் எத்தனை எத்தனை மாறுபட்ட குணசித்திரங்களை அவர் செய்திருக்கிறார்.

கடமையே உருவான, கண்ணியம் நிறைந்த போலீஸ் இன்ஸ்பெக்டராக, நீதிக்காகப் போராடும் முரட்டு நாயராக, அப்பாவி அண்ணனாக, சினிமா சான்ஸ் தேடி அலையும் ஒரு 'பாமாவிஜயம்' குமாஸ்தா

1. **அரசியல்வாதிகள்;**
2. **அமைச்சர்கள்;**
3. **காவல் துறையினர்;**
4. **அரசு ஊழியர்கள்;**



வாக, 'புன்னகை'யில் ideal க்கும் நடைமுறைக்கும் compromise செய்து கொள்கிற இன்றைய மனிதனாக என்று எத்தனை எத்தனை குணசித்திரங்கள்!

Not every smile is a smile of welcome என்று ஒரு அராபியப் பழமொழி. 'இந்த இரண்டு புன்னகைகளுக்கும் வித்தியாசம் காட்டிச் செய்வதில் நீங்கள் ஒரு வல்லுநர்' என்று நான் அவரிடம் சொல்வதுண்டு.

"என்னால் என் முகத்தை மாற்றிக் கொள்ள இயலாத நிலையில் என் முக பாவங்களை மாற்றிக் கொண்டு செயல்பட முடிகிறது" என்று வேடிக்கையாகச் சொல்வார்.

அவர் அதிகம் படித்தவரில்லைதான். ஆனால் வாழ்க்கையில் அவர் தானாகவே கற்றுக் கொண்டவை ஏராளம்.

"வாய்ப்பு, வசதி, மகிழ்ச்சி இவையெல்லாமே நம்மிடம் appointment கேட்டு வாங்கிக் கொண்டு வருவதில்லை; எதிர்பாராமல் வருவன! ஸ்ரீதர் மூலமாக என் வாழ்க்கையில் இந்த மூன்றுமே வந்தது" என்று 'புன்னகை' படப்பிடிப்பின் போது அவர் ஒருமுறை என்னிடம் குறிப்பிட்டது கவனத்திற்கு வருகிறது.

இவர் ஏடுகளில் அதிகம் படித்தவரில்லைதான். ஆனால் இவரை என்னால் படிக்க முடிந்தது.

Channing சொன்னதைப் போல், He was a volume; I could read him.

இனியவர், சிறந்தவர். அவருக்கே உரித்தான நடிப்பு, கவர்ச்சியான குரல், மற்றவர்களுடன் பழகுவதில் உள்ள தனித் தன்மை இந்த குணங்கள் அனைத்துமே அவரைத் திரையுலகின் gentlemanஆக அடையாளம் காட்டின.

சற்றும் மிகைப்படுத்தாத நடிப்பு. கடினமான உணர்வுகளைக் கூட தனது நடிப்பில் எளிதில் பிரதிபலித்துக்காட்டுகின்ற அவரது ஆற்றல், என்னைச் சில சமயங்களில் ஆச்சரியத்தில் ஆழ்த்தும். அப்படி ஒரு grip over his performance. மிகச் சிறந்த காமெடியன்களுக்கே உரித்தான timing sense இவருக்குக் கை வந்த கலை.

நடிப்பில் மட்டுமல்லாமல் sportsகளில் அவருக்கு அதிகமான ஆர்வமும், ஈடுபாடும் உண்டு. படப்பிடிப்பின் போது அவர் சற்று குழைந்து குழைந்து என்னிடம் ஏதோ பேச முற்பட்டால், தன்னை நான்கு மணியளவில் படப்பிடிப்பிலிருந்து அனுப்பி விட வேண்டுமென்கிற ஒரு வேண்டுகோளாகத் தான் அது இருக்கும்! அன்றைக்கு ஏதாவது football match இருக்கும்.

பழகுவதற்கு இனிய நண்பர்; கள்ளம்

5. **வக்கீல்கள்;**
6. **தொழில் அதிபர்கள்;**
7. **வங்கி அதிகாரிகள்;**
8. **நீதிபதிகள்;**



கபடில்லாதவர் என்பதற்கு அவருடைய சிரிப்பே அத்தாட்சி. 'கலீர்' என்கிற வெண்கலச் சிரிப்பை எங்கு கேட்பினும் அங்கே முத்துராமன் இருக்கிறார் என்று முடிவு செய்து கொள்ளலாம்.

முத்துராமனுடைய பலஹீனம் ஒன்றே ஒன்றுதான். தமது சிரிப்பை அடக்கிக் கொள்ளவே முடியாத ஒரு வீக்னஸ்!

'பாமா விஜயம்' நடந்து கொண்டிருந்த நேரம். முத்துராமன், சுந்தரராஜன், நாகேஷ் மூவரும் அதில் சகோதரர்களாக நடித்தது நினைவிருக்கலாம்.

ஒரு நாள் படப்பிடிப்பு. ஷாட்டுகளுக்கிடையே மூவரும் விழுந்து விழுந்து சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். சற்று கடுமையாகவே அவர்களைக் கண்டித்துவிட்டு, ஷாட்டில் பேச வேண்டிய வசனங்களை அவர்களுக்குச் சொன்னேன். மூவரும் மாறி மாறி வசனம் பேச வேண்டிய காட்சி அது.

ஒத்திகை தொடங்கும். சுந்தரராஜன் பேசிய பிறகு, நாகேஷ் பேச ஆரம்பிக்கும் போதே தாங்க முடியாமல் சிரிக்க, அதைப் பார்த்தவுடன் முத்துராமனும் சிரிப்பை அடக்கிக் கொள்ள முடியாமல் விழுந்து விழுந்து சிரிப்பார். இதைத் தொடர்ந்து சுந்தரராஜனும் சிரிப்பை அடக்க முடியாமல் சிரிப்பார்.

அடுத்த ஒத்திகை. இப்பொழுது முத்துராமன் சிரிக்க ஆரம்பிப்பார். தொடர்ந்து நாகேஷ் விழுந்து விழுந்து சிரிப்பார். தான் மட்டும் படு சீரியஸாக இருப்பது போல்

பல்லைக் கடித்துக் கொண்டு காட்சியளிக்கும் சுந்தரராஜனும் கடைசியில் அடக்க முடியாமல் சிரித்து விடுவார். இப்படியே பாதி ஒத்திகையில் இவர்கள் சிரிக்க ஆரம்பித்து, பலமுறை ஒத்திகைகள் நடந்து கொண்டே இருந்தன. ஒரு தடவை கூட 'ஷாட்' முழுவதும் ஒத்திகை செய்யப்படாமலே நேரம் வீணாகிக் கொண்டிருந்தது. நான் பொறுமையிழந்து கத்தினேன். அவர்கள் எல்லோரும் சீரியஸ் ஆகி விட்டார்கள்.

நான் take என்று சொன்னேன். காமிரா ஓடிக் கொண்டிருந்தது. பாதி take லே ஒருவர் சிரிக்க ஆரம்பிக்க, மற்றவரும் தொடர மூவரும் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

ஓடிக் கொண்டிருந்த காமிராவை நான் cut பண்ணிவிட்டு கோபத்துடன் அப்பால் நகர்ந்தேன். ஒரே ஒரு வினாடி யோசனை செய்தேன். அன்று படப்பிடிப்பை ரத்து செய்கிற மாதிரி 'pack up' சொல்லிவிட்டு நகர்ந்தேன்.

நின்று திரும்பி, "இனி சத்தியமாக உங்கள் மூவரையும் ஒரே படத்தில் போட்டுப் படம் எடுக்க மாட்டேன்" என்று சொல்லிவிட்டு வெளியேற முற்பட்டேன்.

> 9. **பத்திரிகைத் துறையினர்;**
> 10. **ஆசிரியர்கள்;**
> 11. **பொது ஜனங்கள்.**
> — **இது என்ன பட்டியல் என்கிறீர்களா?....**

**மு**த்துராமன் என் அருகில் வேகமாக வந்து "ஸாரி ஸார்! packup பண்ண வேண்டாம். சீனை முடிச்சுடறோம். இனிமே சிரிப்பு வராது" என்று சொல்ல, நான் மற்ற இருவரையும் பார்த்தேன். அவர்களும் கெஞ்சும் பாவனையில் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

எப்படியிருந்தாலும், "நாம் தானே பெற்றுத் தீர வேண்டும்" என்பதால் அதற்கு ஒப்புக் கொண்டு "சரி..... take" என்று சொன்னேன்.

All lights.... Start sound.... Clap.... காமிரா ஓடிக் கொண்டிருந்தது... பேசத் தொடங்கினார்கள். ஒன்றும் தகராறு இல்லாமல் மூவரும் முதல் வாக்கியத்தைப் பேசி முடித்தார்கள். முத்துராமன் முறை வரும் போது 'களீர்' என்று மீண்டும் ஒரு அவுட்டுச் சிரிப்பு! தொடர்ந்து மூன்று பேரும் சிரிப்பு!

இந்த முறை எனக்குக் கோபம் வரவில்லை. நானும் சிரித்துக் கொண்டே நின்றேன்! காமிராவுக்கு cut சொல்லாமலே சிரித்துக் கொண்டிருந்தேன்.

முடிவாக அன்று படப்பிடிப்பு pack up செய்யப்பட்டது.

நாகேஷ் ஏதோ ஒரு ஹாஸ்ய சம்பவத்தைப் படப்பிடிப்பினிடையே மற்ற இருவருக்கும் சொல்லியிருக்கிறார். அதை நினைத்து நினைத்துத்தான் எல்லோரும் சிரித்துக் கொண்டே இருந்திருக்கிறார்கள் என்பதெல்லாம் அதன் பிறகுதான் தெரிய வந்தது.

பின்னால் நான் எடுத்த புன்னகை திரைப்படத்தில் இந்த மூவரும் நடித்தார்கள் என்றாலும் மூவரும் ஒன்று சேர்ந்து நடிக்கின்ற காட்சிகள் எதுவுமே அமையாதது irony யா இல்லை just a coincidence ஆ?

**மு**த்துராமன் அவர்கள் அகால மரணமடைந்து விட்டார் என்கிற செய்தி தெரிந்தவுடன் எனக்கு இந்தச் சம்பவம்தான் நினைவுக்கு வந்தது. சம்பந்தமில்லாமல் இந்தச் சிரிப்புச் சம்பவம் ஏன் நினைவுக்கு வருகிறது என்று தோன்றியது.

முத்துராமன் அவர்கள் ஒரு சகாப்தம். திரையுலகப் புதியவர்கள் அவரிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன.

அவருடைய conviction, moderation, balance, integrity, sincerity, devotion and above all his character.

நல்ல அமைதியான, சந்தோஷமிக்க குடும்ப வாழ்க்கை அவருடையது.

> **...நமது நாட்டில் ஊழல் புரிவோர் வரிசையில் யார் யார் எந்த இடத்தில் (Rank) இருக்கிறார்கள் என்பதை உணர்த்துவது தான்.**
> **(நமது பெருநகரங்களில் டைம்ஸ் ஆஃப் இந்தியா - மார்க் நிறுவனம் நடத்திய 'சர்வே'யில் வெளிப்பட்ட தகவல்களின்படி.)**
> **— பார்கவி**

Good family life is never an accident; it is an achievement.

முத்துராமன் அவர்களுடைய குடும்ப வாழ்க்கைக்கு இது முற்றிலும் பொருத்தமான வாசகம்.

வாய்ப்பு, வசதி, மகிழ்ச்சி இவையெல்லாமே நம்மிடம் appointment வாங்கிக் கொண்டு வருவதில்லை என்று அவரே என்னிடம் சொன்னாரே ஒரு நாள்!

அவரது அகால மரணம் கூட appointment கேட்டுக் கொண்டா வந்தது!

(தொடரும்)

வரலாறு காணாத மிகப் பிரமாண்டமான
10 தொகுதிகள் அடங்கிய
'கந்த புராணம்' (விலை ரூ. 600/–) இலவசம்

# தமிழ் நிலையம் வழங்கும் முன் வெளியீட்டு திட்டம்

**தவணை முறையில் செலுத்தலாம்! சலுகையும் உண்டு!**

# தேவாரம்

பன்னிரு திருமுறைகள் – உரையுடன் ஏற்கனவே சில தொகுதிகளை வெளியிட்டுள்ளோம். தற்போது எஞ்சிய அனைத்துத் தொகுதிகளையும் பின்வருமாறு வெளிக்கொணர இருக்கிறோம்!

**சலுகை, இலவச நூல்கள் விவ்ரம் வருமாறு:**

பன்னிரு திருமுறைகளுக்காக (முதல் தவணையாக) ரூ. 725/– ஏப்ரல் 5க்குள் செலுத்துவோர்க்கு உடனடியாக 10 தொகுதிகள் அடங்கிய கந்த புராணம் – இரண்டாம் பதிப்பு (10,345 பாடல்கள் ஒரு பக்கம் மூலம் எதிர்ப்பக்கம் உரை என்னும் முறையில் அமைந்தவை) இலவசமாகத் தருகிறோம்.

| | |
|---|---|
| பன்னிரு திருமுறைகள் (24 தொகுதிகள்) விலை | ரூ. 1900 |
| கழிவு 25% | ரூ. 475 |
| சலுகை விலை | ரூ. 1425 |

இந்தச் சலுகை விலை ரூ. 1425/–ஐ
பின்வருமாறு மூன்று தவணைகளில் செலுத்தலாம்.

முதல் தவணை ரூ. 725/– ஏப்ரல் 5க்குள் அனுப்பவேண்டும்.
2ஆம் தவணை ரூ. 400/– மே 5க்குள் அனுப்பவேண்டும்.
3ஆம் தவணை ரூ. 300/– ஜூன் 5க்குள் அனுப்பவேண்டும்.

**நூல்கள் அனுப்புவது எப்போது?**

முதல் தவணை ரூ.725/- கிடைத்ததும் பன்னிரு திருமுறைகளுள் 1,2,7,8 (ஏழு தொகுதிகள்) மற்றும் கந்த புராணம் 10 தொகுதிகள் ஆக மொத்தம் 17 தொகுதிகள் உடனே அனுப்பி வைக்கப்படும். (பணம் நேரில் செலுத்துவோர் இந்நூல்களை நேரிலேயே பெற்றுக் கொள்ளலாம்.)

ஜூன் மாத இறுதியில் 3,4,9,11,12ஆம் திருமுறைகள் அனுப்பப்படும்.

ஜூலை மாத இறுதியில் 5,6,10ஆம் திருமுறைகள் அனுப்பப்படும்.

# திருமுறை – நூல்கள் – ஆசிரியர்கள் – பாடல்கள் – தொகுதிகள் – விலை அட்டவணை

| திருமுறை எண் | நூல்கள் | ஆசிரியர்கள் | பாடல்கள் | தொகுதிகள் | விலை |
|---|---|---|---|---|---|
| முதலாம் திருமுறை | தேவாரம் | திருஞானசம்பந்தர் | 1469 | 2 | 175.00 |
| இரண்டாம் திருமுறை | தேவாரம் | திருஞானசம்பந்தர் | 1331 | 2 | 175.00 |
| மூன்றாம் திருமுறை | தேவாரம் | திருஞானசம்பந்தர் | 1346 | 2 | 175.00 |
| நான்காம் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசர் | 1069 | 1 | 100.00 |
| ஐந்தாம் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசர் | 1015 | 1 | 100.00 |
| ஆறாம் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசர் | 980 | 1 | 100.00 |
| ஏழாம் திருமுறை | தேவாரம் | சுந்தரர் | 1026 | 1 | 100.00 |
| எட்டாம் திருமுறை | திருவாசகம், திருக்கோவையார் | மாணிக்கவாசகர் | 656 + 400 = 1056 | 2 | 170.00 |
| ஒன்பதாம் திருமுறை | திருவிசைப்பாக்கள் திருப்பல்லாண்டு | திருமாளிகைத் தேவர், சேந்தனார் முதலான ஒன்பது பேர் பாடியவை | 301 | 1 | 55.00 |
| பத்தாம் திருமுறை | திருமந்திரம் | திருமூலர் | 3047 | 3 | 200.00 |
| பதினொன்றாம் திருமுறை | தொகுப்பு | காரைக்கால் அம்மையார், சேரமான் பெருமாள் நாயனார் முதலான பன்னிரண்டு பேர் பாடிய பாடல்கள் | 1400 | 2 | 150.00 |
| பன்னிரண்டாம் திருமுறை | திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்) | சேக்கிழார் | 4286 | 6 | 400.00 |

பணத்தினை D.D. (அ) M.O. மூலம் அனுப்புக. புத்தகங்கள் வழக்கம்போல் V.P.P.யில் அனுப்பப்படும். தபால் செலவினைத் தபால்காரரிடம் செலுத்தி, நூல்களைப் பெறுக.

*பணம் அனுப்பவேண்டிய முகவரி:*

**தமிழ் நிலையம்,**

**ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ், 141, உஸ்மான் சாலை,**

**தியாகராய நகர், சென்னை – 17.**

**(பனகல் பார்க் அருகில்)**



# ஜெயலலிதா தெய்வமேதான்!

◆ 'நேற்றைய குற்றம், இன்றைய நியாயம், நாளைய சட்டம்' என்ற தலைப்பில் சொல்லப்பட்டது தமாஷ் ஜோக் என்றாலும், நாளை உண்மையாகவே இப்படி ஒரு நிலை ஏற்படாது என்பது என்ன நிச்சயம்?

கச்சமங்கலம், ஜி.முத்தமிழ்ச்செல்வி

◆ சதம் அடித்து வெற்றி கண்ட காந்தியவாதியான மொரார்ஜி அவர்களை அட்டையில் வெளியிடாமல் இப்படி ஒரு சமூக விரோதியை அட்டைப்படமாக்கியிருக்கிறீரே. இது என்ன நியாயம்?

அரவக்குறிச்சிப்பட்டி, எம்.அசோக்ராஜா

◆ "சினிமா சான்ஸ் வேண்டாம்பா.." சமாசாரமெல்லாம் புளித்துப் போன ஸ்டேட்மென்ட். கனவுத் தொழிற்சாலையில் விரைவிலேயே தருணாவைப் பார்க்கும் 'தருணம்' வரத்தான் போகிறது! (சாவஞ்ச...? மிஸ் தருணா? சாரி மிஸ் இநகர், ராகா etc)

அரக்கோணம், எல்.கோபாலகிருஷ்ணன்.

◆ 'தராசு'வின் 'தமிழர்கள் எல்லோரையுமே தொட்டில் குழந்தைகளாக எண்ணித்தான் காதுகுத்திக் கொண்டிருக்கிறார்கள்!' என்கிற பதிலைப் படித்ததும் காது குத்தின வலியையும்(!) மறந்து சிரித்து விட்டேன்!

அரக்கோணம், ா.எஸ். சம்பத்ராஜ்

◆ 'வீரப்பன் கோட்டைக்கு ஒரு விசிட்!' கட்டுரை நடுநிலையுடன் இருந்தது. தேவாரம் அவர்கள் பத்திரிகைகளின் சமூகவிரோத செயல்கள் கண்டு சோர்வடையவில்லை என்பதைக் 'கல்கி' பேட்டி தெளிவு படுத்துகிறது.

திருச்சி-21, கிஷோர்.

◆ "அதிர்ஷ்டம் மட்டுந்தான் அவனை இதுவரை காப்பாற்றி வந்திருக்கிறது..." என்று வீரப்பன் பற்றி ஒரு ஜோசியர் சொன்னா ஒதுக்கலாம்... ஒரு போலீஸ் ஆபீசர் இப்படிச் சொல்லலாமா? அப்படியென்றால் அவனைப் பிடித்து விட்டால் 'அவன் துரதிர்ஷ்டம்.. அகப்பட்டுக் கொண்டான்.. எங்கள் திறமை இதில் ஒன்றும் இல்லை' என்று சொல்வாரா?

திருச்சி-20, ச.நாகராஜன்.

◆ "பூனைகள் ராஜ்யம்" ஒரு 'ஜஸ்ட் லைக் தட்' கதை என்று விட்டுவிட முடியாது. "விலங்கினங்கள் தேவலாம். நம்முடைய பூனைகள் ராஜ்யத்தில் புலி எது? பூனை எது?"என்பது மிகச் சத்தியமான வார்த்தைகள். புலிகள் பெயரால் பூனைகள் வேஷம் போட்டாலும் சத்தியம் என்று நம்பும் கூட்டங்கள் இருக்கும்வரை பூனைகள் பாடு கவலை இல்லை. ராஜ்கமலால் மட்டும் என்ன செய்துவிட முடியும்?

பெங்களூர்-93, தி.க. வேங்கடராமன்.

◆ இன்னல் சாதனை ஆர்வலர்களுக்கு ஒரு புதிய யோசனை சொல்லிட்டீங்களே! தன்னைத்தானே செருப்பால் அடித்துக் கொள்ளும் ஜோக் மூலமாக!

காட்டூர், எஸ். அருள்மொழி.

◆ ஆர்.சூடாமணி அவர்கள் எழுதிய 'அன்னப் பறவை' மிக மிக அற்புதமான படைப்பு. "எத்தனை பெண்கள் வசப்படுகிறார்கள் என்பதை வைத்துத்தான் ஓர் ஆண் தன் வெற்றியைக் கணக்கிடுகிறானா?" என்ற வரிகளை ஒரு ஆணே நினைத்துப் பார்ப்பதுபோல் அமைத்திருப்பது பாராட்டத் தக்கது.

திருப்பனந்தாள், ஜி.மதுரபாஷிணி

◆ 45 ஆண்டுகள் திருச்சியிலே வாழ்ந்தும், புனித ஜூர்து அன்னை ஆலயத்தைப் பற்றி எங்களுக்குத் தெரியாத பல அரிய தகவல்களைத் தந்துள்ள கட்டுரை ஆசிரியருக்கும், வெளியிட்ட கல்கிக்கும் எங்கள் நன்றிகள்.

திருச்சி-2, ஆ.ஜோசப்

◆ ஜெயலலிதா முதல்வராக வந்த பிறகுதான் தமிழ் நாட்டு கோயில்களில் கும்பாபிஷேகங்கள் நடக்கின்றன. நித்திய பூஜைகள், பூசாரிகளுக்கு ஒழுங்கான சம்பளம், கோயிலுக்குக் காவலர்கள், கோயில் சீரமைப்பு எல்லாம் நடக்கிறது. விநாயகர் ஊர்வலங்கள் ஒழுங்காக நடக்கின்றன. மயிலை தெப்ப உற்சவம், திருவல்லிக்கேணியில் தெப்ப உற்சவம் போன்றவைகள் நடக்கின்றன. ஆகையால் தமிழகத்தில் இந்துக்கள் முட்டாள்களும் இல்லை, மூடநம்பிக்கையுடனும் இல்லை. இந்து மதத்தை ஆதரிக்கும் ஒரு முதல்வரை நாங்கள் ஆதரிக்கிறோம். ஜெயலலிதா பராசக்தியாய்ப் படத்தில் இருப்பதால் தவறும் இல்லை. இன்று உண்மையிலேயே மக்கள் மனத்தில் அப்படியே இருக்கிறார்.

சென்னை-84, ஏ.சுப்பிரமணியன்

**வேதா கோபாலன்**

# காதலுக்கு ஜே!



**கா**லிங் பெல்லை அழுத்தினேன். பிள்ளை யாரப்பா. இதுவாவது முடியட்டும். இரண்டு முறை, மூன்று முறை நாகரிகமில்லாமல் அந்த மணி காதைக் கிழித்து, பிறகும் பதிலில்லை. கம்பி போட்ட கதவின் வழியே நெடுக ஹால் தெரிந்தது. உள்...ளே சலசலவென யாரோ குளிக்கும் ஒலி. பிள்ளை யாரப்பா. இந்த வீட்டிற்கு நான் வந்த காரியத்தை நல்லபடியாய் முடித்து வை. தோ பாருய்யா. இந்த வாட்டியும் முடியலைன்னா... எனக்குக் கெட்ட கோவம் வரும். உன் கூடப் பேசவே மாட்டேன். எனக்கு அதெல்லாம் தெரியாதுப்பா. இன்றைக்கே இரண்டில் ஒன்று தெரிந்தா

இருநூறாவது முறையாய் நான் நாத்திகனாகி மீண்டும் மீள முயல்வதற்குள் -

"யாருப்பா அது...?" அப்பாடா! உள்ளேயிருந்து குரல். இந்த மணிக்கு பதில் வ்ந்து விட்டதெனில் என் எண்ணம் ஈடேறும் என்கிற மாதிரி, சகுனம் தட்டுப்பட -

"சார்... உங்ககிட்டே கொஞ்சம் பேசணும்" என்றவாறு எட்டிப் பார்த்த மனிதரை உற்றுப் பார்க்க முயன்றேன். பதினோரு மணிக் கொளுத்தலில் உள்ளேயிருந்து பார்த்த மனிதரின் முகம் ஏனோ ஆந்தையை நினைவுபடுத்தியது.

"குளிச்சுண்டிருக்கேன். வர்றேன்" கதவருகில் தலை மட்டும் எட்டிப் பார்க்க, பதில். ரிக்ஷாக்காரனை அனுப்பி விடலாமா? வேண்டாம். அப்புறம் வெயிலில் எத்தனை தொலைவு நடப்பது? இந்த மனிதர் வந்த பத்து நிமிஷத்தில் பேசி விட்டுக் கிளம்பி விடலாம்.

இரண்டு மூன்று நிமிடம் நின்றிருப்பேன். பக்கத்து வீட்டி லிருந்து ஒரு பெண் பிள்ளை எட்டிப் பார்த்தாள். என்









முப்பத்தைந்து வயசுக்கு எரிச்சலாய் வந்தது. அவன் யாரையோ கூப்பிட்டு என்னைக் காட்டி வேடிக்கை பார்த்தது இரட்டிப்பு எரிச்சல் நல்கியது. 'யோவ்! சீக்கிரம் குளிச்சுட்டு வாயேன்.

உள்ளே இன்னும் சலசல ஒலி. எனக்கு ஆச்சர்யம் மட்டுமில்லை. ஆத்திரமும். வெளியே ஒருத்தன் காத்திருக்கும்போது இத்தனை விஸ்தாரமாய்க் குளிக்கத் தோன்றுமா என்ன? ப்ச். நம் ஆத்திரம் நமக்கு. ஒரு வேளை நாம் வந்த நிமிடம்தான் அவர் பாத்ரூமுக்குள் நுழைந்திருக்கலாம்.

"நாராயணா... நாராயணா... ஈஸ்வரா..." என்று ஆரம்பித்து ஒரு பெரிய லிஸ்ட்டாய்க் கடவுள்களின் பெயர்களைச் சொன்னார். குளித்து முடித்தவுடன் என் தாத்தா கூட இப்படிச் சொல்வதுண்டு. என் தங்கை புவனாவும் இப்போதெல்லாம் அதைக் காப்பி



டெல்லி டவுன் பஸ்ஸில் ஒரு நபர் விடாக் கண்டனாக மகளிர் இருக்கையிலேயே அமர்ந்திருந்தார். அந்தப் பெண்மணி மனம் சலித்துப் போய், 'மக் ஹை, பைட்டியே பஹன்ஜி (சகோதரி), பைட்டியே' என்று கூறவும் பஸ் பயணிகள் அனைவரும் கொல்லென்று சிரித்தனர். வெட்கிப் போன அந்த ஆண் பயணி எழுந்து இடம் தந்தார்!

— எகனாமிக் டைம்ஸ்

— ஆர். கோபாலன்

யடிக்கிறாள்.

ஒருவேளை எந்தக் கடவுளுக்காவது காதில் விழுந்து அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாகாதா என்ற நப்பாசையாய் இருக்கக்கூடும். அந்த புவனாவின் ஜாதகத்துடன்தான் இந்த வீட்டுப் படியில் தவம். அவள் திருமணம் பொருட்டுத்தான் எந்த அவமதிப்பையும் சகிக்கும் திடம்!

அப்பா! ஒரு வழியாய்க் குளியல் ஆயிற்று. இடுப்பில் சின்னதாய் ஒரு துண்டு கட்டிக் கொண்டு காலடியில் ஈரம் தரையில் பதிய நடந்து வந்து கதவு திறந்தார்.

"என்ன விஷயம்?" என்னை 'வாக்வம் க்ளீனர்' விற்பனைப் பிரதிநிதியாய் நினைத்தாரோ?

"உள்ளே வந்து பேசலாமா?"

"வாங்கோ..." அழைப்பில் அரை மனது தெரிந்தது.

"எங்க வீட்டுப் பெண்ணோட ஜாதகமும் உங்க பையனோட ஜாதகமும் பொருந்..."

அவருக்கு, 'ப்பூ இவ்வளவுதானா?' என்று தோன்றியதோ?

"இருங்கோ. ஒரு நிமிஷத்தில் வந்துடறேன்."

ஏற்கனவே ஒரு நிமிஷம் என்று சொல்லிவிட்டுச் சரியாய் இருபத்தைந்து நிமிடமானது நினைவுக்கு வந்தது. ரிக்ஷாவை அனுப்பி விடலாமா? இத்தனை நேரம் காக்க வைத்த கஸ்மாலத்திடம் கொள்ளையடிப்பானே? வேண்டாம். தங்கை கல்யாணத்தின் பொருட்டு எத்தனையோ செலவினங்கள். ரிக்ஷாவையும் எழுதி விடுவோம்.

மனிதர் உள்ளே போய் ஜலத்தில் வேட்டியை அலசுவது காதில் விழுந்தது. மேலும் ஐந்து நிமிடம் சென்று வெளிப்பட்டார்.

மடித்த வேட்டியை ஒரு முறுக்காய் முறுக்கி, கையிலிருந்த மழமழத்துப் போன மூங்கில் குச்சியால் சடக்கென்று ஒருவித லாகவத்துடன் உயரத்தில் கட்டியிருந்த கம்பிக் கொடியில் போட்டார்.

சாதாரண மனநிலையில் இருந்திருந்தால் இதையெல்லாம் அனுபவித்து ரசித்திருப்பேன். இப்போது டென்ஷன். தங்கை டென்ஷனுடன் ரிக்ஷா டென்ஷனும் சேர்ந்து கொண்டு விட்டது.

வேட்டியை உலர்த்தி விட்டு வருவார் என்றுதான் எதிர்பார்த்தேன். தடக்கென்று சாமி படங்களின் முன் போய் நின்று கொண்டார். உரத்த குரலில் சுலோகங்களைச் சொல்ல ஆரம்பித்தார். டென்ஷனையும் மீறி மனம் லயித்தது. இந்தக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். ஒவ்வொரு சாமிக்கும் செம்பருத்திப் பூ.

அப்பாடா. ஒரு வழியாய் தீபாராதனை. இப்போது பஜனை மாதிரி ஏதோ பாடலைப் பாட ஆரம்பித்து விட்டார். போச்சுடா. அந்தக் கற்பூரத்தை எத்தனை ரூபாய்க்கு வாங்கினார் என்று விசாரிக்க வேண்டும். இத்தனை நேரமா எரியும்? வாட்சைத் திருப்பி நேரம் பார்த்தால் என் அவசரத்தைக் காட்டிக் கொள்வது போல் ஆகும் என்று பயந்து, தற்செயலாய்க் கழுத்தைத் திருப்புகிறவன் போல் திருப்பி, அவர்கள் வீட்டு கடிகாரத்திலேயே நேரம் பார்த்தேன். ஐயோ! ஒரு மணி நேரமாகவா காத்திருக்கிறேன்?

பயத்துடன் ரோட்டை எட்டிப் பார்த்தேன். ரிக்ஷாக்காரன் வண்டியிலேயே படுத்து, வெயிலுக்குச் சுகமாய்த் தூங்கிப் போயிருந்தான். நிம்மதியாய்த் தூங்குவது

பார்த்தால் கல்யாணத்துக்குத் தங்கை யாரும் இல்லை என்று புரிந்தது.

பக்கத்தில் ஏதோ ஃபாக்டரி இருக்கும் போலும். சங்கு பிடித்தது. எனக்கு இந்த ஏரியா அதிகம் பரிச்சயமில்லை. தாம்பரம் பக்கம் இப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியாது. திருவல்லிக்கேணிதான் என் சொர்க்கம். இங்கு ஸ்டேஷனில் இறங்கி ரிக்ஷா வைத்துக் கொண்டு வந்தது, பெரிய ஊருக்குப் போகிற பயணம் போல்தான் இருந்தது.

என் தங்கையை இந்த வீட்டில் கொடுத்தால், ஒவ்வொரு தடவையும் இப்படித்தான் அவஸ்தைப்பட்டு அவள் பிறந்தகம் வர வேண்டும். ஆனால் இப்போது முப்பது வயசுக்குக் கல்யாணமாகாமல் அவள் நிற்பதை விட, அப்புறம் பிறந்தகமே வராமல் இருந்தால் அது பொருட்டல்ல.

திடீரென்று பூஜை, பாடல் எல்லாமுமாய் நின்று விட, அப்பாடா என்று இரும்பிப் பார்த்தேன். நமஸ்கரிக்க ஆரம்பித்தார். இதோ முடிந்துவிடும் என்ற எதிர்பார்ப்போடு பார்த்தேன். ஐயோடா! எனக்குத் தெரிந்து ஒருமுறை நமஸ்கரிப்பார்கள். இரண்டுமுறை நமஸ்கரிப்பார்கள். போனால் போகிறது நான்கு. இங்கே என்னடாவென்றால் மனிதர் இது வரைக்கும் இருபது முறை முடித்து விட்டார். ஒரு வேளை எக்ஸர்ஸைஸ் பண்ண இது ஒரு சாக்கோ?

"ஐ'ஆம் ஸாரி. நான் பூஜை முடிக்காமல் யார்கிட்டேயும் பேசறதில்லை" என்று சொன்னவாறு ஒருவழியாய் வெளியே வந்தார். திருநீறு உலர்ந்து இப்போது சுண்ணாம்பு அடித்த மாதிரி கையெல்லாம் பட்டை வரிகளாய்த் தெரிந்தது.

"சேச்சே... என்ன ஸாரியெல்லாம் சொல்றீங்க... நீங்க பெரியவர்..." என்று சட்டென்று எழுந்து நமஸ்கரித்தேன். "ஐயா. என் வீட்டுப் பெண்ணை எப்படியாவது உங்க வீட்டுப் பிள்ளைக்கு ஏற்றுக் கொள்வீராக!" - மனசு வேண்டியது.

"ஐயய்யோ... என்ன தம்பி இது நமஸ்காரமெல்லாம் பண்ணிக்கிட்டு... எழுந்திருங்க."

"வந்து... இதுதான் என் தங்கையின் போட்டோ..." இருப்பதிலேயே சிறப்பாய் அவளை எடுக்க முயன்றிருந்த போட்டோவை எடுத்துக் காட்டினேன்.

அவர் அதைக் கையில் கூட வாங்கவில்லை. "இருக்கட்டும். இருக்கட்டும்."

"வந்து... என் தங்கை பள்ளிக்கூடத்தில் கிளார்க்காய் வேலை பார்க்கறா..."

"அப்படியா...? நாங்கதான் பாங்க் அல்லது கவர்மெண்ட்டுன்னு எழுதியிருந்தோமே?"

"இருந்தாலும் இரண்டு ஜாதகங்களும் பிரமாதமாய்..." அவநம்பிக்கையுடன் இழுத்தேன். அவர்கள் வீட்டுப் பையன் மட்டும் துக்கிளியூண்டு கையகலக் கம்பெனியில் வேலை செய்யலாமாம். பாங்க் உத்யோகத்தில் பெண் வேண்டுமாம்!

அவர் தீர்மானம் கலையாத குரலில் "அவன்தான் அப்பிடி கண்டிஷன் போடறான். நாளைக்குக் காலத்துக்கும் அவன் தானே அவ கூட வாழப் போறான்?"

"இப்படிச் சொன்னா எப்படி... நீங்க என்னவெல்லாம் செய்யணும்னு எதிர்பார்க்கறீங்கன்னு சொன்னால்..." இன்னும் பெண் கூடப் பார்க்காத நிலையில் பேரம் பேசுவது பைத்தியக்காரத்தனம் என்று தெரிந்தும் கேட்டேன்.

அவர் வேறு ஒரு தீர்மானத்துக்கு வந்திருக்க வேண்டும். "நேத்தி ஒரு இடத்தில் பெண் பார்த்துட்டு வந்தோம். எங்களுக்குப் பிடிச்சடும் போல்தான் இருக்கு..."

"இது... ஏழு பொருத்தம் இருக்கு..."

"அதில் எழுநூறு பொருத்தம் இருக்கு..." அவர் பேசும் குரலில் கிண்டலா, கோபமா என்று புரியவில்லை.

"சரி... நான் கொஞ்சம் வெளியே போகணும்.." அவராகவே சட்டென்று எழுந்து கொண்டார். போய்யா என்று துரத்தல் தெரிந்தது.

"தொந்தரவுக்கு மன்னிக்கணும்." எழுந்தேன்.

**வெ**ளியில் வந்தேன். ரிக்ஷாக்காரனை எழுப்பினேன். "வாய்யா."

ஒரு மணி நேரத்துக்கு மேல் வெயிட்டிங் போட்டதற்காய் அவன் என்னை வசை பாடுவான் என்று நினைத்தேன். அவன் புன்னகையுடன் சீட்டைத் துடைத்து என்னை அனுமதித்தான். பணம் பண்ணுவதில் இதுவும் ஒரு மார்க்கம். ஏழை. இவனுக்குத் தாராளமாய்க் கொடுக்கலாம்.

ரிக்ஷாவில் ஸ்டேஷனை அடைந்து அவன் கேட்ட இருபத்தி ஐந்தை மறு பேச்சின்றிக் கொடுத்து, மின்சார ரயில் ஏறி, மீண்டும் பஸ்... மீண்டும் நடை. அப்பாடா. உஸ்ஸென்ற அனல் காற்று முகத்தைப் பிறாண்டும் பஸ்ஸின் ஓர சீட்டை மறக்க, வீட்டுக்குள் நுழைந்தவுடன் தண்ணீரை முகத்தில் வாரி அடித்துக் கொண்டேன். மீண்டும் எந்த ஜாதகம் பொருந்துகிறதோ அந்த ஆள் வீட்டுக்குப் போய் இப்படிக் காத்திருந்து... அவள் கல்யாணத்தின் பிறகுதான் என் கல்யாணம் என்ற நிலையில் நேரடியாய் அறுபதாம் கல்யாணமே சாத்தியம் என்று தோன்றியது.

"**அ**டேடே... வந்துட்டியாப்பா... வா... வா..."

ஐயோ. அம்மா. உன் ஆர்வத்தை நேர்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். "என்ன சொன்னார்கள்? என்றைக்குப் பெண் பார்க்க வருகிறார்கள்?" என்று விசாரிக்கப் போகிறாயே... என்ன சொல்லட்டும்?

இப்போது தங்கையின் ஏமாற்றத்தையும் விட, என் ஏமாற்றத்தையும் விட அம்மாவின் ஏமாற்றம் விஸ்வரூபமாய்த் தெரிந்தது.

ஆர்வத்துடன் அம்மா கிட்டே வந்தாள். ஆனால் ஆர்வமாய் விசாரிக்காமல் வேறு ஏதோ சொன்னாள். "இன்னிக்கு உன்னைப் பார்க்க ராபர்ட்டுன்னு ஒருவர் வந்திருந்தார். ரொம்ப நேரமாய் உனக்காகக் காத்திருந்தார்."

காத்திருத்தல் என்றாலே கடுப்பாகிய விஷயம் என்று நன்கு உணர்ந்தவனாதலால் மரியாதையுடன் கேட்டேன். "எங்கேயிருந்து வர்றாராம்? என்ன விஷயமாம்? விசாரிச்சியா?"

"உம்... நம்ம.. டேய்.. கொஞ்சம் பொறுமையாய்க் கேளுடா... குதிக்காதேடா... ஆத்திரமில்லாமல் அட்வைஸ் பண்ணு. புவனா கேட்டா.. வந்து... அவன் நம்.. புவனாவோட பள்ளிக்கூடத்தில் பி.டி. வாத்யாராய் இருக்கானாம். இவளை... இவளைப் பண்ணிக்கணும்னு ஆசைப்படறானாம்.. ஆனால்... இருஸ்துவா..."

நான் அம்மாவை ஒருகணம் உற்றுப் பார்த்தேன். மின்னும் அவள் கண்களில் எத்தனை பாவங்கள்? தயக்கம், பயம், வியப்பு, ஆர்வம், ஏக்கம், எதிர்பார்ப்பு... சட்டென்று சொன்னேன்.

"நாளைக்கே அவனைக் கூட்டி வரச் சொல்லும்மா... எங்கே வைச்சுக் கல்யாணம் முடிக்கச் சொல்றாங்களோ அங்கே சந்தோஷமாய்ச் செய்து கொடுப்போம்."



"மாப்பிள்ளை மந்திரி மாதிரி...."

"அப்படியா?"

"ஆமா எம் பொண்ணு எது சொன்னாலும் பதிலே கிடையாது! பொட்டுனு கால்ல விழுந்துடுவார்!"

— டி.எஸ். திருமலைராயன்






'வரும் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து 'அன்லெடட் பெட்ரோல்' (Unleaded petrol) என்ற ஒன்று இந்தியாவின் நான்கு பெரு நகரங்களிலும் அறிமுகமாகிறது. இதைப் பயன்படுத்த இப்போதுள்ள வண்டியின் எக்ஸாஸ்ட் பைப்புகள் தோதுபடாது என்பதால் இவற்றில் சில மாற்றங்கள் செய்ய வேண்டியிருக்கும்' என்றெல்லாம் மொட்டையாகச் செய்தித் தாள்களில் படித்தோம்.

தெளிவான விவரங்களை அறிய இந்தியன் ஆயில் கார்ப்பரேஷனின் மக்கள் தொடர்பு அதிகாரி ராமகிருஷ்ணனை அணுகினோம்.

**அதென்ன அன்லெடட் பெட்ரோல்?**

இப்போதுள்ள பெட்ரோலில் 0.015 சதவீதம் ஈயம் உள்ளது. நாளுக்கு நாள் வண்டிகள் அதிகரித்து வருவதால், காற்று மண்டலத்தில் இப்போதுள்ள (ஈயம் கலந்த) பெட்ரோலினால் வெளியாகும் நச்சுப் புகையின் சதவீதம் அதிகரித்துக் கொண்டே போகிறது. இந்த நச்சுத் தன்மையைக் குறைக்கத்தான் ஈயம் நீக்கப்பட்ட பெட்ரோலை அறிமுகப்படுத்த அரசு தீர்மானித்திருக்கிறது.

**பெட்ரோலில் எப்படி ஈயம் இருக்கும்?**

பெட்ரோலில் வேண்டுமென்றே தற்போது ஈயம் கலக்கப்படுகிறது. அப்படிக் கலப்பதற்குக் காரணம் உண்டு. வண்டி என்ஜின் தடங்கலின்றி இயங்க (அதாவது 'என்ஜின் இடிக்கிறது' என்கிறார்களே, அப்படி நேராமல் இருக்க) ஈயம் உதவுகிறது.

**அப்படியானால் ஈயம் நீக்கப்பட்டால் என்ஜின் தடங்கலின்றி இயங்காமல் போய்விடும் என்றாகிறதே!**

இதற்காக (பென்ஸின் போன்ற) மற்றொரு மாற்றுப் பொருளைச் சுத்திகரிப்பு சாலைகளில் கண்டுபிடித்திருக்கிறார்கள். அது இனி ஈயத்துக்குப் பதிலாகக் கலக்கப்படும்.

**இந்தப் புதிய (அதாவது ஈயம் நீக்கப்பட்ட) பெட்ரோலைப் பயன்படுத்த வேண்டுமானால் என்ஜின் மற்றும் எக்ஸாஸ்ட் பைப்பை மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டுமாமே? இது ஸ்கூட்டர், மோட்டார் பைக் போன்ற இரு சக்கர வாகனங்களுக்கும் பொருந்துமா?**

இப்போதைக்கு கார்களைப் பற்றிதான் எங்களுக்குச் சுற்றறிக்கை வந்திருக்கிறது. அரசு உத்தரவின்படி வரும் ஏப்ரல் முதல் தேதி முதல் விற்பனைக்கு வரும் கார்களில் இந்தப் புதிய பெட்ரோலைப் பயன்படுத்துவதற்கு ஏற்ற வகையில்தான் பாகங்கள் பொருத்தப்பட்டிருக்க வேண்டும். ஏற்கெனவே உள்ள கார்களில் புதிய பெட்ரோலுக்கு ஏற்ற வகையில் பாகங்களை மாற்றி அமைக்க சுமார் 15000 ரூபாய் செலவாகக் கூடும்.

**சென்னையைப் பொருத்தவரை, வரும் ஏப்ரலிலிருந்து எவ்வளவு பங்குகளில் இந்தப் புதிய பெட்ரோல் கிடைக்கும்?**

பதினோரு பெட்ரோல் ஸ்டேஷன்களில் புதிய பெட்ரோல் கிடைக்கும். இரண்டு வகை பெட்ரோல்களும் கிடைக்கும்.

**படிப்படியாகப் புதிய பெட்ரோல் மட்டுமே கிடைக்கும் என்ற நிலை உருவாகும் என்கிறீர்களே, இது எவ்வளவு ஆண்டு காலத் திட்டம்?**

1998 ஏப்ரலில் சென்னையிலுள்ள எல்லா பெட்ரோல் ஸ்டேஷன்களிலும் ஈயம் நீக்கப் பட்ட பெட்ரோல் மட்டுமே கிடைக்கும்படி திட்டமிட்டிருக்கிறது சுற்றுப்புற அமைச்சகம்.

**ஏப்ரல் மாதத்திற்குப் பிறகு வாங்கிய ஒரு புதிய காரில் ஒருவர் தென்னகம் முழுவதும் டூர் அடிக்க தீர்மானிக்கிறார் என்றால், அவர் சென்னையிலிருந்தே பீப்பாய் பீப்பாயாகப் பெட்ரோலை நிரப்பிக் கொண்டு போக வேண்டுமா?**

நீங்கள் கூறுவது போன்ற நடைமுறைச் சிக்கல்கள் தொடக்க காலத்தில் உண்டாகலாம் என்பதை ஒப்புக் கொள்கிறேன். இன்னும் சிறிது காலம் கழித்து எல்லா முக்கிய நகரங்களிலும் புதிய பெட்ரோல் கிடைக்குமாறு திட்டங்கள் தீட்டி வருகிறோம். போகப் போக எல்லா பிரச்னைகளுக்கும் தீர்வுகள் கண்டு விடுவோம்.

**-ஜி.எஸ்.எஸ்.**



# பாலம்

●● 16.2.95 வியாழன் இரவு என் காமிராவை மெட்ராஸ் கிளப்பில் தவறுதலாக மறந்து வைத்துவிட்டேன். அதனைக் கண்டெடுத்தவர்கள் எனக்குத் திருப்பிக் கொடுக்கக் கேட்டுக் கொள்கிறேன். அதில் உள்ள பிலிம் எனக்கு மிக முக்கியமானது.

- டாக்டர் ஜே. பாஸ்கரன்,
189/8 எஸ்.வி.லிங்கம் சாலை,
கே.கே.நகர், சென்னை - 78.



●● காலஞ்சென்ற ஹரிகதா விற்பன்னர் எம்பார் ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் நிகழ்த்திய "ஸ்ரீ ருக்மிணி கல்யாணம்" ஒலி நாடா அல்லது ஒலித் தட்டு யாரிடமாவது இருக்குமானால் நகல் எடுத்துக் கொண்டு திருப்பித் தருகிறேன். சன்மானம் வழங்கவும் தயார்.

- ப. இராமபிரசாத்,
8/11, TNHB, திருமுல்லைவாயில்,
சென்னை - 600 062.



●● HAM பற்றி அறியவும் கற்றுக் கொள்ளவும் விருப்பம். உதவும் மனம் உள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.

- மு. தனகோபாலன்,
அரசினர் மருத்துவமனை,
திருவாரூர் - 610 002.



●● HAM Club உறுப்பினரின் தொடர்பு தேவை.

- எஸ்.எஸ். நாகராஜன்,
21, N.G.O. காலனி,
திண்டுக்கல் - 629 009.



●● Journal of the Indian Chemical Society; Indian Journal of Chemistry இந்த சஞ்சிகைகளின் முகவரி தெரிந்தவர்கள் எழுதி அனுப்ப வேண்டுகிறோம்.

- எஸ். முத்துகுமார்,
எம்.வி. ராமகிருஷ்ணன்,



ராஜபாளையம் ராஜுக்கள் கல்லூரி,
ராஜபாளையம் - 626 117.

●● டீ.வி. ஆன்டன்னா சொந்தமாகத் தயார் செய்து விற்பனை செய்ய விரும்புகிறேன். முன் அனுபவம் உள்ளவர்கள் கற்றுத் தந்தால் நன்றி.

- ஏ. அருள்ராஜ்,
36 B1, மன்னை சாலை,
அகரமாணைக்கால்,
திருத்துறைப்பூண்டி - 614 713.



●● ரஷ்யாவின் மாயச் சாமியார் 'ரஷ்புட்டீன்' பற்றிய நாடகம் அல்லது கதை யாரிடமாவது இருந்தால் அனுப்பி வைக்கக் கோருகிறேன். ஓர் ஆராய்ச்சிக்காகத் தேவைப்படுகிறது.

- அழகிரி விசுவநாதன்,
4065, கோவில் தெரு, டபீர் குளம் சாலை,
கீழவாசல், தஞ்சை - 613 001.

●● சித்த வைத்தியத்தில் வியாதிக்குரிய மருந்துப் பொருட்கள் என்னிடம் உள்ளன. மேற்படி மருந்துப் பொருட்களைக் கொண்டு 'சிரப்' மற்றும் 'டானிக்' தயார் செய்யக் கூடிய முறைகள் தெரிந்த ஆலோசகர் தேவை. சன்மானம் உண்டு.

- ஏ.எம். ராஜு,
9/20, மெயின் ரோடு,
முக்காணி - 628 154
திருப்பரணர் (மா.வ)



●● IIT படிப்பு நுழைவுப் பரீட்சை சம்பந்தமான பாடப் புத்தகங்கள் தேவையானவருக்குக் கொடுக்க விருப்பம்.

- ஆர். மணிகண்டன்,
6, வி.வி. கிரி தெரு,
சத்யாதோட்டம்,
சாலிகிராமம், சென்னை - 93.



●● புதிதாய்த் தொழில் முனைவோருக்கு அல்லது மாணவர்க்கு நல்ல நிலையில் இயங்கிக் கொண்டிருக்கும் கம்ப்யூட்டரைக் குறைந்த விலைக்குத் தரத் தயாராக இருக்கிறேன். தேவைப்படுவோர் மாலை வேளைகளில் அணுகவும்.

- வி. ஜகதீசன்,
A-6, ஸ்டேட் பேங்க் ஃபிளாட்ஸ்,
ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33.

**(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்.)**

பாதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பாதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# சலவைக்கு சலவை! சலுகைக்கு சலுகை!

# இலவசம்!

ரூ. 1.25 மதிப்புள்ள ஒரு கேஸ்பர் கொசுக்களை விரட்டும் மேட் ஒவ்வொரு 300 கிராம் டோட்டல் பாருடன் அல்லது 250 கிராம் டோட்டல் கட்டியுடன்




ரூ. 2.50 மதிப்புள்ள இரண்டு கேஸ்பர் கொசுக்களை விரட்டும் மேட்க்கள் ஒவ்வொரு 500 கிராம் டோட்டல் பாருடன்




CASPER

CASPER

## டோட்டல்

நீல டிட்டர்ஜெண்ட் பார்

MSIL A product of
Mysore Sales International Limited
Bangalore-560 052.